4-2

ஸ்ரீ

# ஸ்ரீரங்க வைபவம்




S. நரசிம்ம அய்யங்கார் அவர்களால்

எழுதப்பட்டது




சாது அச்சுக்கூடம்

இராயப்பேட்டை, சென்னை

1940

# முகவுரை

ராவ்பஹதூர் திரு. C. M. இராமச்சந்திர செட்டியார், பி. ஏ., பி. எல். அவர்கள், சென்னை இந்து தர்ம பரிபாலன போர்டு கமிஷனராக நியமிக்கப்பட்டவுடன் அவருடைய நேர்பார்வையிலுள்ள கோவில்களை விருத்தி செய்வதன் பொருட்டும், வெளி தேசங்களிலிருந்து புதிதாக ஆலயத்திற்கு வருபவர்களுக்குக் கோவிலின் சரித்திரம் சுருக்கமாகத் தெரிந்துகொள்ளுவதற்காகவும் ஒரு சிறிய புத்தகம் பிரசுரிக்கும்படி சுற்றறிக்கை அனுப்பியதன் பேரிலும் இந்நூல் எழுதப்பட்டது.

இந்நூல் எழுதுவதில் ஸ்ரீரங்கம், மேல உத்தர வீதி, ஸ்ரீமான் S. நரசிம்ம அய்யங்கார் அவர்கள் செய்த உதவி மறக்கமுடியாது.

ஸ்ரீரங்கநாதஸ்வாமிவகையரா
தேவஸ்தானம்,
ஸ்ரீரங்கம்.

D. MADHAVAN PILLAI,
B. A., B. L.,
ஆக்டிங் எக்ஸிகியூடிவ் ஆபீஸர்.

# ஸ்ரீரங்கம், ஸ்ரீரங்கநாதஸ்வாமி தேவஸ்தானத்தில் உள்ள ஆலயங்கள், மண்டபங்கள் இவைகளின் விவர ஜாபிதா



1. நான்முகம் கோட்டை
2. கூரத்தாழ்வார் [வாசல்
3. நாலுகால் மண்டபம்
4. நாதமுனி
5. தொண்டரடிப்பொடி
6. விட்டல் கிருஷ்ணன்
7. திருப்பாணாழ்வார்
8. பழைய ஆபீஸ்
9. உள்ளாண்டாள்
10. கிருஷ்ணன்
11. அமிர்த கருடன்
12. ரங்கவிலாஸம்
13. கல்கம்பம்
14. ஹனுமார்
15. புது ஆபீஸ்
16. புத்தகாலயம்
17. உடையவர்
18. பார்த்தஸாரதி
19. சக்கரத்தாழ்வார்
20-21. வஸந்த மண்டபம்
22. கார்த்திகை கோபுரம்
23. கருட மண்டபம்
24. திருக்கச்சிநம்பி
25. சந்நதி கருடன்
26. நம்மாழ்வார்
27. ஸ்ரீபண்டாரம்
28. திருமழிசை ஆழ்வார்
29. ஆர்யபட்டாள் வாசல்
30. ஹனுமார்
31. நெய் கிணறு
32. ஊஞ்சல் மண்டபம்
33. சுக்கிரவார அறை
34. திருவந்திக்காப்பு மண்ட
35. நாழிகேட்டான் [பம்
36. கருகூலம்
37. சந்தன அறை
38. விஜயரங்க சொக்கநாதர்
39. தொண்டமண்டலம் கட்
40. சேனை முதலியார் [டளை
41. அர்ஜுன மண்டபம்
42. கிளி மண்டபம்
43. ஸ்ரீரங்கநாதர் சன்னதி
44. கிருஷ்ணன் கோவில்
45. துரை மண்டபம்
46. சத்திரப்போடு
47. பணியாரப்போடு
48. பெரிய சன்னதி மடப் பள்ளி
49. சட்டிபானை அறை
50. திருக்கொட்டாரம்
51. தாயார் சன்னதி பிரதக்ஷ
52. பட்டாபி ராமர் [ணம்
53. முதலாழ்வார்
54. பரமபத வாசல்
55. சந்திரபுஷ்கரணி
56. தாயார் சன்னதி
57. வடக்குவாசல் கோபுரம்
58. கோதண்ட ராமர்
59. பரமபதநாதர்
60. மணல்வெளி
61. தவுட்டர வாசல்
62. ஆயிரக்கால் மண்டபம்
63. ,, மணல்வெளி
64. வெள்ளை கோபுர வாசல்
65. சேஷராயர் மண்டபம்
66. ராமர்
67. பிள்ளைலோகாச்சாரியர்


N
E
S
W
1
2
3
4
5
6
7
8
9
10
11
12
13
14
15
16
17
18
19
20
21
22
23
24
25
26
27
28
29
30
31
32
33
34
35
36
37
38
39
40
41
42
43
44
45
46
47
48
49
50
51
52
53
54
55
56
57
58
59
60
61
62
63
64
65
66
67

# அட்டவணை



பக்கம்

1. ஸ்ரீரங்கத்தின் மகிமை ... 9
2. ஸ்ரீரங்க க்ஷேத்ர உற்பத்தி ... 11
3. ஸ்ரீரங்க விமான உற்பத்தி ... 12
4. ஸ்ரீரங்க விமானம் ... 13
5. ஸ்ரீரங்க விமானத்தைப் பிரமனுக்கு அளித்தல் ... 15
6. ஸ்ரீரங்க விமானம் இக்ஷ்வாகுவுக்குக் கிடைத்தது ... 15
7. ராமபிரான் விமானத்தை விபீஷணருக்கு அளித்தல் ... 15
8. ரங்க விமானம் ஸ்ரீரங்கம் வந்து சேர்தல் ... 16
9. ரங்க விமானத்துக்குப் பிராகாரம் ஏற்படுதல் ... 17
10. உறையூர் வல்லி வைபவம் ... 18
11. ஸப்த பிராகாரத்தின் விவரம் ... 19
12. அடையவளைஞ்சான் வீதி ... 19
13. வெளியாண்டாள் என்கிற சூடிக்கொடுத்த நாச்சியார் சந்நதி ... 19
14. மாடமாளிகை சூழ்திருவீதி என்னும் சித்திரை வீதி ... 21
15. திருவிக்ரமன் திருவீதி என்கிற உள்திருவீதி ... 22
16. அகளங்கன் திருவீதி ... 23
17. நான்கு முகம் கோபுரவாசல் ... 23
18. ரங்க விலாசம் ... 23
19. தீபஸ்தம்பமும் பலிபீடமும் ... 25
20. ஹனுமார் கோவில் ... 25
21. நாதமுனிகள் சந்நதி ... 25
22. யானை ஏறும் மண்டபம் ... 26
23. உள் சூடிக்கொடுத்த நாச்சியார் சந்நதி ... 26

| | | |
|---|---|---|
| | | பக்கம் |
| 24. வேணுகோபாலன் சந்நதி | ... | 27 |
| 25. வாகன மண்டபம் | ... | 27 |
| 26. அமிருதகலச கருடன் சந்நதி | ... | 27 |
| 27. கூரத்தாழ்வான் சந்நதி | ... | 28 |
| 28. தொண்டரடிப்பொடியாழ்வார் சந்நதி | ... | 28 |
| 29. விட்டல் கிருஷ்ணன் சந்நதி | ... | 29 |
| 30. திருப்பாணாழ்வார் சந்நதி | ... | 29 |
| 31. அகளங்கன் திருவீதி | ... | 29 |
| 32. சக்கரத்தாழ்வார் சந்நதி | ... | 29 |
| 33. வசந்த மண்டபம் | ... | 30 |
| 34. ஸ்ரீரங்கநாச்சியார் சந்நதி | ... | 30 |
| 35. மேட்டு அழகிய சிங்கர் சந்நதி | ... | 32 |
| 36. வேதாந்ததேசிகர் சந்நதி | ... | 33 |
| 37. பெரியவாச்சான்பிள்ளை சந்நதி | ... | 33 |
| 38. ஆயிரக்கால் மண்டபம் | ... | 33 |
| 39. வெள்ளைக் கோபுரம் | ... | 34 |
| 40. கல்குதிரை மண்டபம் | ... | 34 |
| 41. பிள்ளைலோகாசாரியார் சந்நதி | ... | 35 |
| 42. பார்த்தசாரதி கோவில் | ... | 35 |
| 43. உடையவர் சந்நதி | ... | 35 |
| 44. புத்தகசாலையும் பொருள் காட்சி சாலையும் | ... | 36 |
| 45. ஆலிநாடன் திருவீதி | ... | 37 |
| 46. சொக்கப்பனைக் கோடவாசல் | ... | 37 |
| 47. கங்கையும் யமுனையும் | ... | 37 |
| 48. கருட மண்டபம் | ... | 37 |
| 49. கருடன் கோயில் | ... | 38 |
| 50. நம்மாழ்வார் சந்நதி | ... | 38 |
| 51. திருக்கச்சிநம்பி சந்நதி | ... | 39 |
| 52. கொட்டாரம் | ... | 39 |
| 53. மேல் பட்டாபிராமன் சந்நதி | ... | 39 |

பக்கம்
54. முதலாழ்வார் சந்நதி ... 40
55. தீர்த்தக்கரை வாசுதேவப்பெருமாள் சந்நதி ... 40
56. தன்வந்திரி கோவில் ... 40
57. ஐந்துகுழி மூன்றுவாசல் ... 41
58. சந்திரபுஷ்கரணி ... 41
59. புன்னை விருக்ஷம் ... 42
60. ராமன் சந்நதி ... 42
61. பரமபதநாதன் சந்நதி ... 43
62. கோடை மண்டபம் என்னும் பூச்சாத்தும் மண்டபம் 43
63. ஸ்ரீ பண்டார மண்டபம் ... 43
64. திருமழிசையாழ்வார் சந்நதி ... 44
65. ஆரியப்படாள் வாசல் ... 44
66. குலசேகரன் திருவீதி ... 44
67. திருப்பவித்திர மண்டபம் ... 44
68. துவஜாரோஹண மண்டபம் ... 44
69. ஹனுமார் ... 45
70. ஊஞ்சல் மண்டபம் ... 45
71. துவஜஸ்தம்பம் ... 45
72. பலிபீடம் ... 45
73. துரை பிரதக்ஷணம் ... 46
74. பரமபத வாசல் ... 46
75. மடைப்பள்ளிகள் ... 47
76. நாழிகை கேட்டான் வாசல் ... 47
77. ராஜமஹேந்திரன் திருவீதி ... 47
78. கருகூலம் ... 48
79. சுக்கிரவார அறை ... 48
80. யாகசாலை ... 48
81. சேனை முதலியார் சந்நதி ... 49
82. அர்ச்சுன மண்டபம் ... 49
83. சேரகுலவல்லி சந்நதி ... 50

| | | |
|---|---|---|
| | | பக்கம் |
| 84. துருக்கநாச்சியார் அல்லது பீபீநாச்சியார் | ... | 50 |
| 85. ரேவதி மண்டபம் | ... | 51 |
| 86. கிளி மண்டபம் | ... | 51 |
| 87. கிருஷ்ணன் கோவில் | ... | 51 |
| 88. ஸ்ரீனிவாச படம் | ... | 52 |
| 89. அழகிய மணவாளன் திருமண்டபம் | ... | 52 |
| 90. சந்நதி கருடன் கோவில் | ... | 52 |
| 91. கண்ணுடி அறை | ... | 53 |
| 92. மேல்படி - கீழ்ப்படி | ... | 53 |
| 93. சந்நதி வாசல் | ... | 53 |
| 94. காயத்ரி மண்டபம் | ... | 53 |
| 95. தர்மவர்மாவின் திருவீதி | ... | 53 |
| 96. ஸ்ரீரங்க தத்துவம் | ... | 54 |
| 97. நிர்வாகம் | ... | 55 |

---

ஓம் :

# ஸ்ரீரங்க வைபவம்

## 1. ஸ்ரீரங்கத்தின் மகிமை

இந்தியாவிலுள்ள புண்ணிய க்ஷேத்திரங்களிலும், விஷ்ணு ஸ்தலங்களிலும் மிக்க புகழ்பெற்று விளங்கும் க்ஷேத்ரம் ஸ்ரீரங்கம் என்னும் திருவரங்கமே. பகவானுடைய இச்சையினுல் ஏற்பட்டு ஸ்வயம்வ்யக்தம் என்று சொல்லப் படுகிற ஸ்தலங்களுக்குள் ஸ்ரீரங்கமே தலைமை பெற்றிருக்கிறது. ஆழ்வார்களால் பாடப்பட்டுள்ள 108 திருப்பதிகளுக்குள்ளும் இதுவே முதன்மையானதாக இருந்து வருகிறது. ஆழ்வார்கள் பத்துப்பேராலும் பாடப்பட்டுப் "பதின்மர் பாடும் பெருமாள்" என்னும் பிருது பெற்றவனும் ரங்கநாதனே. ராமனுய் அவதரித்த விஷ்ணுவினுலும், பிரும்மாவினுலும் ஆராதிக்கப்பட்டு "புரிசடையோன் புராணம் செய்து எத்தும் கோவில்" என்று சொல்லுகிறபடி பரமசிவனுல் ஸ்ரீரங்க மாகாத்மியத்தை நாரதருக்கு எடுத்துச் சொல்லிப் புகழ்ந்து போற்றப்பட்ட கோவிலும் ரங்கநாதனுடையதே. ரிஷிகளாலும் ஸ்ரீரங்கம் வணங்கப்பட்டது என்பதைக்காட்ட "சேமமுடைய நாரதனுர் சென்று சென்று துதித்திறைஞ்சக் கிடந்தான் கோவில்" என்று பெரியாழ்வார் பேசியிருக்கிறுர். ரிஷிகளுக்கு அடுத்தபடியாகச் சித்தாந்த ஸ்தாபகர்களான சங்கரர், ராமாநுஜர், மத்வாசாரியர்களாகிய இவர்கள் வணங்கி வழிபட்டுப் போற்றியுள்ளார்கள். தற்காலம் அவர்களுடைய பிரதிநிதிகளாயுள்ள மடாதிபதிகளும், அவர்களைப் பின்

பற்றுகிறவர்களும் நாளைக்கும் வந்து வணங்குகிறுர்கள். கொஞ்ச காலத்துக்குமுன், சங்கீதக் கலையை அபிவிருத்தி செய்யும் பொருட்டும், பகவத் பக்தியைப் பரவச்செய்யும் பொருட்டும் நம் நாட்டில் தோன்றிய புரந்தரதாஸர், த்யாக பிரும்மம் முதலான தாஸகோடிகள் அநேகக் கீர்த்தனங்க ளால் திருவரங்கத்தைப் போற்றி இருக்கிறுர்கள். “ தென் நாடும் வடநாடும் தொழநின்ற திருவரங்கம்” என்று ஆழ்வார் பாடியபடி., கன்னியாகுமரி முதல் ஹிமோத்கிரி வரையிலுள்ள நாட்டு ஜனங்கள் தினமும் வந்து இந்தத் திருப்பதியைத் தொழுது வருகிறுர்கள்.

“ நாட்டினுன் தெய்வமெங்கும் நல்லதோர் அருள்தன் னுலே, காட்டினுன் திருவரங்கம் உய்பவர்க் குய்யும்வண்ணம்” என்று ஆழ்வார் சொல்லியிருக்கிறபடி ஆத்ம உஜ்ஜீவனத்தை அடைய வழிகாட்டியாகவே திருவரங்கம் அமைக்கப்பட்டுள் ளது என்று தெரிகிறது. மானிடப்பிறவி பிறந்தவர்களெல் லாம் பிறவிக்கடலைத் தாண்டி மேலான பதத்தை அடைந்து நித்யானந்தத்தை அனுபவிக்கப் பாடுபட வேண்டுமென்று வேதபுராண ஆகமங்கள் பேசுகின்றன. ஆனபடியால் ஆத்ம உஜ்ஜீவனத்துக்குச் சுலபமான மார்க்கத்தைக் காட்டிக் கொடுக் கும் திருவரங்கத்தின் தத்துவ வைபவங்கள் ஒவ்வொரு மானிடரும் அறியத்தக்கதே.

புறச்சமயத்தரான சமணரால் இயற்றப்பட்ட புராதன தமிழ் நூலாகிய சிலப்பதிகாரத்தில் “ தானேங்கு தென்ன ரங்க”மென்று சொல்லியிருப்பதோடு “ பாயற்பள்ளி பலர் தொழுது ஏத்த......கிடந்த வண்ணமும்” என்று ரங்கநாத னின் சயன வைபவத்தை அழகாகப் பேசியிருப்பதைக் காணலாம். மேல் நாட்டிலிருந்து யாத்திரையாய் வரும் எல்லா ஐரோப்பியர் முதலானவர்களும் கிறிஸ்துவப் பாதிரி

களும்கூட இந்த ஸ்ரீரங்கத்திலுள்ள விநோதங்களைக்காண விரும்பி வருகிறார்கள்.

இவ்வளவு மாட்சிமையோடு விளங்கும் ஸ்ரீரங்கத்தை ஒவ்வொருவரும் கண்டு அதன் தத்துவம் வைபவம் வரலாறு களைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமே.

## 2. ஸ்ரீரங்கக்ஷேத்ர உற்பத்தி

ஒரு காலத்தில் கங்கை யமுனை சரஸ்வதி காவேரி முதலிய புண்ய நதிகளின் அதிஷ்டான தேவதைகளான தெய்வ கன்னிகைகள் இமயமலை தாழ்வரையில் விளையாடிக்கொண்டிருக்கும்போது ஆகாயமார்க்கமாய்ச் சென்றுகொண்டிருந்த ஒரு கந்தர்வன் கைகுவித்து வணங்கினான். அதைக்கண்ட கன்னிகைகள் ஒவ்வொருவரும் தன்னைத்தான் வணங்கினதாக சொல்லிப் பூசலிட ஆரம்பித்தனர். இது வீண் விவாதமென்று அறிந்த சிலர் விலகிக்கொண்டனர். கங்கையும் காவேரியும் விவாதத்திலிருந்து விலகவில்லை. இருவரும் பகவானிடம் சென்று "கந்தர்வன்செய்த நமஸ்காரம் யாரைச்சேரும்" என்று கேட்டனர். கங்கை தமது திருவடியிலிருந்து உதித்தவளானபடியால் அவளே பெரியவளென்றும் அவளையே அந்த நமஸ்காரம் சேருமென்றும் பகவான் சொன்னார். இதைக் கேட்ட காவேரிக்குக் கோபம் மூண்டுவிட்டது. எந்த விதத்திலும் தன்னைக் கங்கைக்கு மேற்பட்டவளாகச் செய்து கொள்ளவேண்டுமென்று நினைத்துப் பகவானைக் குறித்துத் தபசுசெய்ய ஆரம்பித்தாள். அநேக காலம் சென்றபின் பகவான் நேரில்வந்து "உன் தபசை மெச்சினோம். நாம் ஒரு காலத்தில் உன்னுடைய மடியில் சயனிக்கப் போகிறோம். அப்பொழுது நீ கங்கைக்கு மேற்பட்டவளாவாய்" என்னும் வரத்தை அளித்தார். பகவான் இந்த வரத்தைக் கொடுத்த

பிறகு பகவானுடைய இச்சையாலே காவேரி மத்தியில் ஒரு தீவும் சந்திர புஷ்கரணியும் அனந்த பீடமும் உண்டாயின.

இரண்டாற்றின் மத்தியிலுள்ள பிரதேசத்திற்கு அரங்கமென்று பெயர். நாடக மேடைக்கும் அந்தப் பெயருண்டு. மேலே சொன்ன தீவு மனோஹரமாயும் சோபையோடு கூடி லக்ஷ்மியே தாண்டவமாடும் இடம்போல் பிரகாசித்த படியாலும், இரண்டாற்றின் மத்தியிலிருப்பதனாலும், ஸ்ரீரங்கம், அரங்கம் என்னும் பெயரைப் பெற்றது.

## 3. ஸ்ரீரங்க விமான உற்பத்தி

கருணைக்கடலாகிய ஸர்வேசுவரன் சரீராதி அவயவங்களில்லாமல் மூலப் பிரகிருதியில் ஆழ்ந்து கிடக்கிற ஜீவாத்மாக்களை அதிலிருந்து விடுவிக்க நினைத்துச் சரீராதிகளைத் தன் கிருபையினால் கொடுத்தான். அந்தச் சரீரத்தை உபயோகித்துக் கொண்டு பிறவிக்கடலைத் தாண்டித் தன்னை வந்தடையும் மார்க்கங்களை உபதேசிக்கும் வேதம் முதலான சாஸ்திரங்களையும் உபகரித்தான். அந்த சாஸ்திரங்களின் உண்மைப் பொருளை அறிந்து அதன்படி நடவாமல் ஜீவர்கள் தங்களைப் பிரகிருதிக்குக் கட்டுப் பட்டவர்களாய்ச் செய்து கொள்வதைக் கண்டு மனம் தாளாமல் தாயினும் அன்பனான பகவான் தானே பூமியில் சில அவதாரங்களைச் செய்து சாஸ்திர தாத்பரியங்களை வெளியிட்டும் அனுஷ்டித்தும் காட்டினான். அந்த அனுஷ்டானாதிகள் அந்தந்தக் காலத்திலிருந்தவர்களுக்கு மட்டிலும் பயனை அளித்தது. பின்புள்ளாருக்குப் பிரயோசனப் படவில்லை. ஜீவாத்மாக்கள் இன்னமும் அனர்த்தப்படுகிறதைப் பகவான் கண்டு பஹிர்யாகம் என்னும் புறப்பூஜையைச் செய்து அதில் நின்றும் ஏற்படும் ஞானத்தைக் கொண்டு அந்தர்யாகம் என்னும் அகப் பூஜையைச் செய்யக்கற்று அதன் மூலமாய்த் தன்னுடைய

ஸாக்ஷாத்காரத்தைப் பெற்றுத் தன்னை யடைவதற்கு உபாயமாயுள்ள விக்ரக ஆராதனையையும் அந்த வழிபாட்டின் முறைகளையும் உண்டாக்கிக் கொடுக்க நினைத்தான்.

இப்படித் திருப்பாற்கடலிலே ஆதிசேஷன்பேரில் சயனித்துக்கொண்டு ஜகத்ரக்ஷண சிந்தையாகிய போகநித்திரையைச் செய்யும் பகவான் நினைத்தவுடன் அவ்வெண்ணமே உருவெடுத்தாற்போலே ஸ்ரீரங்கநாதனோடு கூடிய ஸ்ரீரங்க விமானமும் பாஞ்சராத்திராதி ஆகமங்களும் அவதரித்தன.

## 4. ஸ்ரீரங்க விமானம்

இந்த விமானம் ஸப்தப் பிராகாரங்களுக்கும் மத்தியிலுள்ளது; பிரணவ ஆகாரமாயிருக்கிறது. நான்கு வேதங்களும் சாஸ்திரங்களும் ஸ்தூபிகளா யிருக்கின்றன. நிரம்பவும் அற்புதமாகவுள்ளது. பரவாஸுதேவர் இதிலிருந்து ஸேவை ஸாதிக்கிறார்.

விமானத்தின் வெளியில், மேல் பக்கத்தில் விக்னேச்வரனிருந்துகொண்டு விமானத்தைக் காவல்காத்து வருகிறார். கீழ்ப்பக்கத்தில் ரங்கநாதனின் யோகமாயையாகிய தூர்க்கை விமானத்தின் வெளியிலிருக்கிறாள்.

ஸ்ரீரங்க விமானத்திலுள்ளே ரங்கநாதன் மூலவர், ஐந்து தலைகளோடு கூடிய ஆதிசேஷன்பேரில் "குடதிசை முடியை வைத்துக் குணதிசை பாதம் நீட்டி, வடதிசை பின்பு காட்டித் தென்திசை இலங்கை நோக்கி" என்று ஆழ்வார் பாடியபடி மேற்கே தலையும் கிழக்குப் பக்கம் திருவடிகளுமாக வைத்துக்கொண்டு தெற்கு முகமாய் இலங்கையை நோக்கினவண்ணம் சயனித்துக்கொண் டிருக்கிறார். இவர் தமது திவ்வியமான வலது கையால் தமது திருமுடியையும், இடது கையால் தமது திருவடிகளையும் காட்டி, தாம் ஸகல ஜகத்துக்களுக்கும் நாதனென்றும் எல்லோரும் தமது திரு

வடிகளைப் பற்ற வேண்டும் என்றும் லோகத்தாருக்கு இந்த நுட்பமான ஸூக்ஷ்மத்தைப் போதிக்கிறார்.

உத்ஸவமூர்த்திகள் ஆறு பேர் இருக்கின்றார்கள். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு அதிகாரம். நித்தியப்படி பூஜா கர்மாவுக்காக ஒருவரும், பலி ஸாதிக்க ஒருவரும், சயனத்திற்காக ஒருவரும், தீர்த்தம் ஸாதிக்க ஒருவரும், யோகத்துக்காக ஒருவரும், உத்ஸவத்துக்காக ஒருவரும் ஆக ஆறு பேர்கள் இருக்கிறார்கள். உத்ஸவ பிம்பம், யாக பேரர் நீங்கலாக, மற்றவர்கள் வெள்ளி பிம்பங்கள். உத்ஸவமூர்த்தி உபயநாச்சிமார்களாகிய ஸ்ரீதேவி, பூதேவி இவர்கள் இரண்டு பக்கங்களில் வீற்றிருக்கக் கல்யாண அவஸரமாய் ஸேவை ஸாதிக்கிறார். இவரே, அயோத்தியிலிருந்து விபீஷணரால் எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வரப்பட்டவர் என்று சொல்லுகிறார்கள்.

விமானத்தின் வாசலுக்குத் திருவணுக்கன் திருவாசல் அதாவது பெருமாளுக்குப் பக்கத்திலுள்ள வாசல் என்று பெயர். இந்த வாசலை ஒட்டி உள்புரத்தில் "திருமணத் தூண்" என்று இரண்டு ஸ்தம்பங்களிருக்கின்றன. அவைகள் விமானத்தின் மேலிருந்து காட்சியளிக்கும் பரவாசுதேவரின் கால்களாக அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்தத் தூண்களின் பக்கத்திலிருந்துதான் பெருமாளை ஸேவிப்பது ஆதி காலத்துப் பத்ததி. தற்காலம் உத்ஸவருக்குப் பக்கத்திலுள்ள குலசேகரன் படிக்குப் பக்கம் நின்று சேவிக்கிறார்கள்.

"படியாய்க் கிடந்துன் பவழவாய் காண்பேனே" என்று பாடி அப்படிப் படியாய்க் கிடக்கக் குலசேகராழ்வார் மனோரதித்தபடியால் அந்தப் படிக்குக் குலசேகரன் படி என்று பெயர் உண்டாயிற்று.

## 5. ஸ்ரீரங்க விமானத்தைப் பிரமனுக்கு அளித்தல்

உடனே பகவான் பிரமனை அழைத்து ஸ்ரீரங்க விமானத்தை அவரிடம் கொடுத்துப் பாஞ்சராத்திராதி முறைகளையும் உபதேசித்து, அதைப் பூலோகத்தில் பரவச் செய்ய ஏற்பாடு செய்யச் சொன்னார். பிரமனும் அந்த நியமனத்தைச் சிரமேற்கொண்டு, ரங்க விமானத்தைச் சத்தியலோகத்திற்கு எழுந்தருளப்பண்ணிக் கொண்டுவந்து ஆராதனம் செய்து வந்ததோடு அந்த முறையைப் பூமண்டலத்தில் பரவச்செய்யத் தக்க காலத்தை எதிர்பார்த்து வந்தார்.

## 6. ஸ்ரீரங்கவிமானம் இக்ஷுவாகுவுக்குக் கிடைத்தது

சூரிய புத்ரரான வைவஸ்வத மனுவின் குமாரரான இக்ஷுவாகு தர்மவானும், பகவத்பக்தராயும் அயோத்திக்கு அரசராயுமிருப்பது கண்டு அவர் மூலம் விக்ரக ஆராதனையை நாட்டில் பரவச்செய்ய நினைத்து, இக்ஷுவாகுவிற்கு, ஆலய வழிபாடு முறைகளை உபதேசம்பண்ணி ஸ்ரீரங்க விமானத்தைப் பிரமன் கொடுத்தார். இக்ஷுவாகுவும் ரங்க விமானத்தை அயோத்தியில் தமது அரண்மனையில் எழுந்தருளப்பண்ணி முறை வழுவாமல் ஆராதனம் செய்து வந்தார். அவர் காலம் முதல் அவர் ஸந்ததியில் உதித்த ராமபிரானுடைய காலம் வரையில் அந்த ரங்க விமானம் தங்கள் குல தனமாகக் கருதப்பட்டுச் சூரிய வம்சஸ்தர்களால் ஆராதிக்கப்பட்டு வந்தது.

## 7. ராமபிரான் விமானத்தை விபீஷணருக்கு அளித்தல்

ராம ராவண யுத்தத்தில் ராவணன் அழிந்ததும், ராமபிரான் லக்ஷுமணனைக்கொண்டு விபீஷணருக்கு லங்காராஜ்ய பட்டாபிஷேகம் செய்துவைத்தார். விபீஷணரால் தாம்

அடைந்த உபகாரங்களை நினைத்தபோது அவருக்குத் தகுந்த வெகுமதி அவ்விடம் ஒன்றும் செய்வதற்கில்லையே என்று எண்ணி, தன்னுடன் அவரை அயோத்திக்கு அழைத்துச் சென்றார். அயோத்தியில் தமக்குப் பட்டாபிஷேகமான பிறகு விபீஷணருக்கு லங்கைக்குத் திரும்பிச்செல்ல விடை கொடுக்கவேண்டிய தருணம் வந்தது. என்ன வெகுமதி கொடுத்தனுப்பலாமென்று யோசித்தார். தம்முடைய குல தனமான ரங்க விமானத்தைக் காட்டிலும் சிறந்த வெகுமதி வேறில்லை எனத்தோன்றிற்று. உடனே விபீஷணரை அழைத்து அவரிடம் ரங்க விமானத்தைக் கொடுத்து இலங்கைக்குத் திரும்பிச் செல்ல விடைகொடுத்தார்.

## 8. ரங்க விமானம் ஸ்ரீரங்கம் வந்து சேர்தல்

இலங்கையை நோக்கிப் போய்க்கொண்டிருந்த விபீஷணர் ஸ்ரீரங்க க்ஷேத்ரத்தைக் கண்டதும் தம் மனதைப் பறிகொடுத்தவராய் மனோஹரமாயும் பரிசுத்தமாயுமுள்ள சந்திர புஷ்கரணியின் கரையில் விமானத்தை எழுந்தருளப் பண்ணி அன்றையதினம் ஆராதனத்தை அவ்விடத்திலேயே நடத்தினர். ரங்க விமானம் வந்திருக்கும் ஸமாசாரத்தைத் தெரிந்துகொண்ட மஹரிஷிகளும் சோழராஜனான தர்மவர்மாவும் அவ்விடம் வந்து விமானத்தையும், ரங்கநாதனையும் ஸேவித்துத் திருப்தி பிறவாமையால், ஸமீபித்துவிட்ட ரங்கநாதனுடைய ஆதிப் பிரும்மோத்ஸவத்தை அவ்விடத்திலேயே நடத்தித் தாங்கள் கண்ணாரக்கண்டு ஸந்தோஷிக்கும்படி செய்யவேணுமாய் விபீஷணரைப் பிரார்த்தித்தார்கள். அவரும் அதற்கு இசைந்தார். உத்ஸவமும் முடிந்தது. விபீஷணரும், மஹரிஷிகள், தர்மவர்மா முதலானவர்களிடம் இலங்கைக்குச் செல்ல விடைபெற்றுக்கொண்டு விமானத்தை எழுந்தருளப்பண்ண முயன்றார்; விமானம் அசையவில்லை;

துக்கம் வந்துவிட்டது. கிடைத்தநிதி போய்விட்டதே என்று சொல்லி அழுதார்; ரங்கநாதனைத் தொழுதார். கிருபை செய்யப் பிரார்த்தித்தார். விபீஷணருடைய தீனதசையைக் கண்டு ரங்கநாதனும் மனமிரங்கி, "விபீஷணரே! இந்த இடம் ஏற்கனவே நம்மால் மனோரதிக்கப்பட்டது. காவேரிக்கு நாமளித்த வாக்கை நிறைவேற்ற உன் மூலம் இவ்விடம் வந்துசேர்ந்தோம். இதைவிட்டு நாமும் அசையப்போவதில்லை. உம்முடைய இலங்கா ராஜ்யத்தைப் பார்த்துக்கொண்டு இவ்விடமே சயனித்துக் கொண்டிருப்போம். நீர் இலங்கை சென்று சுகமாக ராஜ்யபாரத்தை வகித்துக்கொண்டு ராம நாமம் பூமியில் நடையாடுமளவும் சிரஞ்சீவியாக இருந்து அரசாண்டு வாரும். வருஷத்துக்கு ஒருதடவை இவ்விடம் வந்து நம்மை ஸேவித்து நம்முடைய ஆதிப் பிரும்மோத்ஸவத்தை நடத்திவையும்" என்று சொல்லி விடைகொடுத்தார். விபீஷணரும் இலங்கை போய்ச் சேர்ந்தார். ஆதிப் பிரும்மோத்ஸவத்திற்குப் பாலிகை தெளிக்க மண் எடுத்துவர சேனை முதலியாருடன் விபீஷணரே சென்று வருவது நாளது வரையில் வழக்கமாக இருந்து வருகிறது.

## 9. ரங்க விமானத்துக்குப் பிராகாரம் ஏற்படுதல்

சோழ ராஜனான தர்மவர்மா பகவானுடைய நிர்ஹேதுக் கிருபையாலே தனக்குக் கிடைத்த ரங்க விமானத்தைச் சுற்றிலும் மதிள் எழுப்பி முன் மண்டபம் முதலானவை கட்டி ரங்கநாதனுக்கு ஆராதனம் முறைப்படி செவ்வையாய் நடக்க ஏற்பாடு செய்தார்.

ஒரு காலத்தில் காவேரியில் பிரவாகம் அதிகரித்து எக்கரடித்து விமானம் மணலில் மூழ்கி மேலே காடும் வளர்ந்து விட்டது. தர்மவர்மாவின் வம்சத்தில் பிறந்த ஒரு சோழன் வேட்டைக்காக அந்தக் காட்டுக்குச் சென்றான். மரத்தி

லிருந்து ஒரு கிளி "காவேரி விரஜா ஸேயம் வைகுண்டம் ரங்கமந்திரம்......" என்கிற ஸ்லோகத்தைச் சொல்லிற்று. அதைக்கேட்ட அந்த ராஜா, அவ்விடத்தில் அந்த ஸ்லோகப் படி ஒரு கோவிலமைக்க எத்தனித்தான். பகவான் அவனுடைய சொப்பனத்தில் தோன்றித் தம்முடைய கோவில் அதே இடத்தில் மணலில் மூழ்கிக் கிடப்பதாய்த் தெரிவித்தார். ராஜாவும் உடனே மணலைப் பரிக்கச்செய்து விமானத்தை வெளிப்படுத்தி மண்டபப் பிராகாரங்களெல்லாம் கட்டித் திருவரங்கம் திருப்பதியாக விளங்கச் செய்தான். அந்த ராஜாவுக்கும் அதுமுதல் கிளிச்சோழன் என்று பெயராயிற்று.

ராஜமஹேந்திரன் என்னும் சோழன் இரண்டாம் பிராகாரத்தைக்கட்டி அநேக திருப்பணிகளும் செய்து வைத்தான்.

## 10. உறையூர் வல்லி வைபவம்

தர்மவர்மாவின் ஸந்ததியில் வந்த நந்தசோழன் ரங்கநாதனுடைய வரப்ரஸாதத்தினால் தனக்குக் கிடைத்தக் கமலவல்லி என்னும் பெண்ணை ரங்கநாதனுக்கே கல்யாணம் பண்ணிக்கொடுத்து நவரத்னங்களாலும் தங்கம் வெள்ளி முதலானவைகளாலும் ஆக்கப்பட்ட அநேக சீர் வரிசைகளுடனும் திரவியங்களுடனும் தாதி வர்க்கங்களுடனும் ஸ்ரீரங்கத்திற்கு அனுப்பி வைத்தான்.

ரங்கநாதனுக்குத் தன் ராஜதானியான உறையூரில் ஒரு கோயிலும் கட்டி வைத்தான். அந்தக் கோயிலுக்கு ரங்கநாதர் பங்குனி உத்ஸவத்தில் ஒரு நாள் எழுந்தருளுகிறார்.

உறையூரில் பிறந்தவளானபடியால் இந்த நாச்சியாருக்கு உறையூர் வல்லி என்று திருநாமமாயிற்று. இவருக்குச் சேடிகளாக வந்த ஸ்ரீரங்கம் கோவில் தாசிகள் ஸந்ததியில் நாளைக்கும் "உறையூர் வல்லி கூட்டத்தார்" என்று அழைக்கப்படுகிறார்கள்.

இந்த உறையூர் வல்லியின் கல்யாண மஹோத்ஸவத்தைப்பற்றி உத்தமநம்பி வம்சத்தில் சுமார் 500 வருஷங்களுக்கு முன்னிருந்த திருமலைநாத உத்தமநம்பி என்பவர் "லக்ஷ்மி காவ்யம்" என்னும் ஒரு காவ்யத்தை இயற்றியுள்ளார்.

## 11. ஸப்த பிராகாரத்தின் விவரம்

ராஜமஹேந்திர சோழனுக்குப் பின் குலசேகராழ்வார் முதலானவர்களால் பிராகாரங்கள் ஆதியில் கிளிச்சோழன் காலத்தில் போட்ட அஸ்திவாரத்தின் பேரில் கட்டப்பட்டு ரங்கநாதன் ஏழு பிராகாரங்களின் மத்தியில் பிரகாசிக்கத் தொடங்கினர்.

## 12. அடையவளைஞ்சான் வீதி

இது ஏழு பிராகாரங்களுக்கும் வெளியிலுள்ளது. ஏழு பிராகாரங்களையுடைய ஒரு கோவிலுக்கு ஆடைபோல் ஒரு ஆவரணம் இருக்க வேண்டுமென்று நினைத்து உண்டாக்கப் பட்டது. "ஆடையாக வளைந்தான்" என்பது மருவிப் போயினது. இந்தப் பிராகார மதில் விஜய நகரம் ராஜாக்களில் ஒருவரால் கட்டப்பட் டிருக்கவேண்டும். ஏனெனில் இந்த மதிலின் தெற்குவாசல் கோபுரம் "ராயர் கோபுரம்" என்று சொல்லப்படுகிறது. ராயரென்கிற பட்டப் பெயருடன் விஜயநகரம் ராஜாக்கள்தா னிருந்தார்கள். இந்த மதிலின் மற்ற வாசல் கோபுரங்கள் கட்டப்படாமல் அஸ்திவாரத்துடன் நிற்கின்றன.

## 13. வெள்ளியாண்டாள் என்கிற சூடிக்கொடுத்த நாச்சியார் ஸந்நதி

இது அடையவளைஞ்சான்வீதியின் தென்மேற்கு மூலையிலிருக்கிறது. ஆண்டாள் ஸ்ரீரங்கம் வந்தபோது இந்த இடத்தி

லிருந்த காவேரியில் நீராட்டம் பண்ணிக் கொண்டாள். அந்த ஞாபகார்த்தமாகப் பெரியாழ்வாரின் சிஷ்யரான வல்லப தேவன் என்னும் பாண்டிய ராஜன் அவ்விடத்தில் ஆண் டாளுக்கும் பெரியாழ்வாருக்கும் கோவிலமைத்தான். இந்தக் கோவிலுக்கு ரங்கநாதன் ஸந்நிதியிலிருந்து படித்தரம் வகை யரா கொடுக்கப்பட்டு வருகிறது.

பகவான் வராக அவதாரம் பண்ணின காலத்தில் “உமக்கு யாரிடத்தில் பிரியம்” என்று பூமிபிராட்டி பகவா னைக் கேட்டார். தனக்குப் பாமாலை பூமாலை, யார் சூட்டுகி றார்களோ அவர்களிடத்தில் பிரியம் என்று பகவான் சொன் னார். இதைக் கேட்டு, தானும் அவர் உகந்த கைங்கரியத்தைச் செய்ய வேண்டுமென்று பூமிபிராட்டி எண்ணினாள்.

வெகுகாலம் சென்றபின் ஸ்ரீவில்லிபுத்தூரில் வைநதே யம்சமாய்ப் பிறந்து நந்தவனமிட்டு வடபத்ரசாயிக்குப் புஷ்ப கைங்கரியம் செய்துவரும் பெரியாழ்வாருக்கு ஒரு துளசி செடியினடியில் ஒரு பெண்ணாகத் தோன்றி அவரால் வளர்க்கப்பட்டு வந்தாள். பெரியாழ்வாரால் பெருமாளுக்குச் சாத்தும் பொருட்டுக் கட்டிவைக்கும் மாலைகளைக் தானணிந்து கொண்டு அழகு பார்த்தபின் கழற்றிக் குடலையிலிட்டு பெருமாளுக்குச் சாத்த அனுப்புவாள். அப்படிச் சூடிக் களைந்த மாலையை வடபத்ரசாயி மிக்க ஆதரத்துடன் ஏற்று வந்தார். அது காரணமாக ஆண்டாளுக்குச் “சூடிக் கொடுத் தாள்” என்னும் பெயருண்டாயிற்று. அந்த ஐதிகத்தைக் கொண்டும், தான் ரங்கநாதனைக் கணவனாக வரித்து மணந்து கொண்டதைக் கொண்டும் ஆண்டாள் ரங்கநாதனுடன் மாலை மாற்றிக் கொள்கிறார்.

ஆடிப் பதினெட்டு அன்று காவேரி கல்யாணம் பண் ணிக்கொண்டு ரங்கநாதன் கோயிலுக்குத் திரும்பும்போதும், பங்குனி உத்ஸவத்தில் உறையூர் வல்லி மணத்தை முடித்துக்

கொண்டு ரங்கநாதன் கோயிலுக்குத் திரும்பும்போதும் வெளியாண்டாளுடன் ரங்கநாதன் மாலை மாற்றிக் கொள்கிறார்.

இந்த அடையவளைஞ்சான் வீதி முழுவதும் பெருமாள் வலம் வருவதில்லை. சில சமயங்களில் சில பாகங்களின் வழியாய் எழுந்தருளுகிறார்.

## 14. மாடமாளிகை சூழ்திருவீதி என்னும் சித்திரைவீதி

இது ரங்கநாதனின் ஏழாவது பிராகாரம். ரங்கராஜாவின் ராஜதானிக்கு ராஜவீதி. இதன் இருபுறமும் மாளிகைகள் நிறைந்திருப்பதால் "மாடமாளிகை சூழ்திருவீதி" என்று பேராயிற்று. சித்திரை மாதத்தில் நடக்கும் திருநாள் இந்த வீதியில் நடப்பதால் இதைச் "சித்திரைவீதி" என்றும் சொல்லப்படுகிறது.

இந்த வீதியில் நான்கு திக்குகளிலும் கோபுரவாசல்களிருக்கின்றன. அவைகளில் கிழக்கிலுள்ள "தாமோதரன் கோபுரவாசலே" முக்கியமானது. ஸ்ரீரங்கத் தீவானது கிழ் மேலாய் ஓடுகிறபடியாலும் அதை அனுசரித்துக் கோவிலும் கிழ் மேலில் அமைந்திருப்பதாலும், ஊருக்கும் கோவிலுக்கும் வெளியில் கிழக்கே இருந்தபடியாலும் இந்த வாசலுக்குப் பிரதானியம் ஏற்பட்டது. இந்த வாசலுக்குள் தமோதரனை கண்ணனின் ஸந்நிதியிருக்கிறபடியால் "தாமோதரன் கோபுரவாச" லென்று அழைக்கப்படுகிறது. தேள் முதலிய துஷ்ட விஷஜந்துக்களின் பயநிவர்த்திக்காக ஜனங்கள் வெண்ணெயைக் கொண்டுபோய் இந்தத் தாமோதரனுக்குச் சாத்துவது வழக்கம்.

இந்த வீதியில் பங்குனி மாதத்தில் நடக்கும் ஆதிப் பிரம்மோத்ஸவத்திலும், விவசாயிகளான கிராமவாசிகளுக்கு விராமகாலமான சித்திரைமாஸத்திலும் ரங்கநாதனை விவசாயிகள் ஸேவித்து ஆனந்தப்படவேணுமென்னும் நல்லெண்ணத்

துடன் விஜயநகர ராஜாவான விருப்பண உடையாரால் ஏற் படுத்தப்பட்ட சித்திரைத் திருநாளிலும் ரங்கநாதன் வாக னுதிகளிலும் பல்லக்கிலும் ரதத்திலும் வலம்வந்து பக்தர் களை ஆனந்திப்பிக்கிறார்.

இது தவிர வைகாசி வஸந்தோத்ஸவக் கடைசி நாள் குதிரை வாகனத்திலும், உறியடி உத்ஸவத்தில் உபயநாச்சி மார், கண்ணன்களுடனும் மாசி மாசத்தில் தெப்பம் பந்தக் காட்சிகளிலும் பெருமாள் வீதியாய்ச் சுற்றி வருகிறார்.

## 15. திருவிக்ரமன் திருவீதி என்கிற உள்திருவீதி

இந்தவீதி ரங்கநாதனின் ஆறுவது பிராகாரம், திரு விக்ரமசோழ ராஜனால் உண்டாக்கப்பட்ட படியால் அந்த ராஜாவின் பேரையிட்டு அழைக்கப்படுகிறது. வீதிகளுக்குள் உள்வீதியாயிருப்பதால் உள்திருவீதி என்றும் வழங்கு கிறது.

இந்த வீதிக்கு நாற்புறத்திலும் கோபுர வாசல்களிருக் கின்றன. அவைகளில் மேல்புறம் வாசல் நீங்கலாக மற்றவாசல் கள் வழியாகப் பெருமாள் எழுந்தருளுகிறார்.

இந்தவீதியில் தை மாதத்தில் விஜயநகரம் ராஜாவான பூபதியுடையாரால் ஏற்படுத்தப்பட்ட ரதோத்ஸவம் நடக் கிறது. காலை மாலை இரண்டு வேளைகளிலும் வாகனங்களிலுய் பல்லக்கிலும் எழுந்தருளுகிறார். ரதத்தில் பெருமாள் உபய நாச்சிமாருடன் வீதிவலம் வருகிறார். மாசிமாதம் தெப்ப உத்ஸவத்தில் முதல் ஏழுநாள் எழுந்தருளுகிறார்.

இந்த வீதியின் தென்கிழக்கு மூலைக்கு ஸமீபத்தில் மணவாளமாமுனி என்னும் வைஷ்ணவ ஆசாரியாரின் ஸந்நதி இருந்து வருகிறது. அது ஆதியில் பல்லவராயன் மடமா யிருந்தது. ரங்கநாதனின் கட்டளைப்படி மணவாளமாமுனி அதில் வசித்து வந்தார். இவரை ஆதிசேஷனின் அவதார

மென்று வைஷ்ணவர்கள் போற்றுகிறார்கள். இந்த மடத்தின் கம்பத்தடியில் அவர் யோகத்தி லிருக்கும்போது அவ்விடம் சென்ற உத்தம நம்பிக்குத் தன்னுடைய அவதார ரஹஸ்யத்தை அவர் காட்டிக் கொடுத்தார். காட்டிக் கொடுத்தபடி அதே கம்பத்தில் சித்திர ரூபமாய் எழுந்தருளி யிருக்கிறார். அவரே மூலபிம்பம். உத்ஸவபிம்பமும் மணவாள மாமுனியின் கட்டளைப்படி மிகச் சின்னவரா யிருக்கிறார். இந்த ஸந்நிதிக்கு நித்யப்படி படித்தரங்களும், திருநக்ஷத்திர, திருவத்யயன உத்ஸவங்களுக்கு மரியாதை வரும்படிகளும், ரங்கநாதன் ஸந்நிதியிலிருந்து கொடுக்கப் பட்டு வருகின்றன.

## 16. அகளங்கன் திருவீதி

இந்த வீதி கோவிலின் ஐந்தாம் பிராகாரம். அகளங்க நாட்டாழ்வான் என்கிற ராஜாவால் உண்டாக்கப்பட்டதால் அந்த ராஜாவின் பெயரால் இது அழைக்கப்படுகிறது.

## 17. நான்கு முகம் கோபுரவாசல்

இந்த வீதியின் வடக்கு கிழக்கு தெற்குப் புரங்களில் வாசல்களும் கோபுரங்களும் இருக்கின்றன. தென்புரம் வாசலுக்கு "நான்குமுகம் கோபுரவாச" லென்று பெயர். அந்த வாசலின் கோபுரம் நான்கு திக்குகளையும் நோக்கும் நான்கு முகங்களோடு கூடியிருப்பதால் அதற்கு அந்தப் பெயர் வந்தது.

## 18. ரங்க விலாசம்

நான்குமுகம் கோடை வாசல் நுழைந்து உள்ளே சென்றால் மத்தியில் ஒரு நாலுகால் மண்டபத்தோடு கூடிய ஒரு விசாலமான திறந்த வெளியும் அதன் முன்புறம் ஒரு

பெரிய மண்டபமும் தோன்றுகிறது. அதுவே ஸ்ரீரங்கஸ்ரீ பிரகாசிக்குமிடம்.

திறந்த வெளியின் மத்தியிலுள்ள மண்டபம் முக்கியமானது. அதைக் கம்பர் மண்டபம் என்று சொல்லுகிறார்கள். அந்த மண்டபத்தின் தென்கிழக்கு மூலையிலுள்ள கல் தூணில் தமிழ் கவிச் சக்கரவர்த்தியான கம்பநாட்டாழ்வாரின் பிம்பம் செதுக்கப்பட்டிருக்கிறது. அவர் பிம்பம் இருப்பதினாலே அந்த மண்டபத்திற்கு அந்தப் பெயர் வந்திருக்கிறது.

கம்பர் தாம் பாடிய ராமாயணத்தை ஸ்ரீரங்கத்தில் நாதமுனிகள் முன்னிலையில் அரங்கேற்றுபடி பண்ணினார். அதை ஞாபகப்படுத்தும் பொருட்டே, நாதமுனி ஸந்நிதி முன்னிலையில் கம்பர் பிம்பத்தை அமைத்துள்ளாரென்று தெரிகிறது.

இந்த மண்டபத்தின்மேல் உள்புறத்தில் வரையப்பட்டுள்ள சித்திரங்கள், ரங்கநாதன் பிரும்மோத்ஸவங்களில் ஒவ்வொரு திருநாளும் காலைமாலைகளில் எந்தெந்த வாகனங்களில் எழுந்தருளி ஸேவை கொடுப்பார் என்பதைக் காட்டுகின்றன.

வாகனாதிகளில் ரங்கநாதன் வீதிவலம் வந்தபிறகு இந்த மண்டபத்தில் திருவந்திக்காப்பு (கட தீபாராதனை) நடத்தப்படும்.

ரங்க விலாசத்தின் வடபக்கத்திலுள்ள மண்டபத்தின் கொடுங்கையின்பேரில் அநேக பிம்பங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் அந்த ரங்க விலாஸத்திற்கு ஒரு அழகையும் காண்பவர் மனதைக் கவரக்கூடிய ஒரு சக்தியையும் அளிப்பதோடு, மத ஸம்பந்தமான அநேக தத்துவங்களை ஞாபகப்படுத்தக் கூடியவைகளா யிருக்கின்றன. மேலைக் கோடியில் நாரதர் பிம்பமும் கீழைக்கோடியில் தும்புருவின் பிம்பமும் காண்கின்றன. அவைகள், ரங்கநாதன் விஷயமாய் தொண்டரடிப் பொடியாழ்வார் பாடியுள்ள திருப்பள்ளி

எழுச்சியிலே " தும்புரு நாரதர் புகுந்[illegible] என்கிற பாகத்தை ஞாபக மூட்டுகின்றன. கீழே உள்ள கம்பம் இரண்டிலுள்ளயாளி சில்பத் திறமை வாய்ந்துள்ளது.

## 19. தீபஸ்தம்பமும் பலிபீடமும்

ரங்கவிலாஸ மண்டபத்தின் வடகோடியில் ரங்காதனுடைய தீபஸ்தம்பமும் மஹா பலிபீடமுமிருக்கின்றன. திருக்கார்த்திகை தினம் இந்தத் தீபஸ்தம்பத்தின் பேரில் தீபம் வைக்கப்படாமல் சொக்கப்பனை என்று ஒரு தென்னை மரத்தை நட்டு அதைச் சுற்றிப் பனமட்டை கட்டி ரங்காதனுக்கு ஆர்த்திசெய்த பந்தத்தினல் தீயை வைத்து எரியச் செய்யப்படுகிறது.

ஒவ்வொரு பிரம்ம உத்ஸவத்திலும் வீதியில் எல்லாத் திக்குகளிலும் அங்கங்குள்ள தேவதைகளுக்குப் பலிசாதித்த பிறகு மிகுந்துபோன பலிப் பிரசாதத்தை இந்த மஹா பலி பீடத்தின் பேரில் சேர்க்கிறார்கள்.

மேலே சொன்ன தீபஸ்தம்பத்தில் ஹரிஜனங்கள் என்று இப்போது வழங்குகின்ற வகுப்பார்கள் ரங்காதனுக்குச் செய்யவேண்டிய வந்தனை வழிபாடுகளைச் செய்கின்றார்கள். ரங்காதனும் ஆவேசமுகமாய் அவர்கள் தங்களுடையகுற்றம் குறைகளை எடுத்துச் சொல்ல அவர்களை ஆசீர்வதிக்கிறார்.

## 20. ஹனுமார் கோவில்

இது மஹாபலிபீடத்துக்கு வடக்கிலுள்ள ஒரு சிறிய கோவில். ராமன் விஷயத்திலன்றி வேறொன்றிலும் தம் மனதைச் செலுத்தாதவரான ஹனுமார், ராமன் ஆராதித்த ரங்காதனைக் கைகுவித்து வணங்கி நிற்கிறார்.

## 21. நாதமுனிகள் ஸந்நதி

ரங்க விலாசத்தின் மேல் பக்கத்தில் நான்முகம் கோட்டைவாசல் மதிலை ஒட்டி இந்த ஸந்நதியிருக்கிறது.

இதில் மறைந்துபோன தமிழ் மறைகளைப் புனருத்தாரணம் பண்ணி, அதன் உட்பொருள்களை லோகத்தார் அறியும் பொருட்டு ரங்கநாதன் ஸந்நதியில் அநேக பத்ததிகளாய் ஏற்படுத்தச் செய்த வைஷ்ணவாசாரியரான நாதமுனிகளும் அவருடைய பேரனான ஆளவந்தாரும் அவர் சிஷ்யரான திருவரங்கப் பெருமாளரையரும் அர்ச்சா பிம்பங்களா யிருந்து வருகிறார்கள்.

## 22. யானை ஏறும் மண்டபம்

இந்த மண்டபத்தில் ரங்கநாதன் எழுந்தருளி இளநீர் அமுதுசெய்து அதன்பின் யானை வாகனத்தில் ஆரோகணம் செய்கிறபடியால் இதற்கு அந்தப் பெயர் வந்தது.

## 23. உள்சூடிக் கொடுத்த நாச்சியார் ஸந்நதி

இது யானை ஏறும் மண்டபத்தின் வடக்கிலுள்ளது. இந்த ஸந்நதிக்கு ஆதியில் “தோப்புராமன் ஸந்நதி” என்று பெயர். இன்னமும் இந்த ஸந்நதியில், ராமன் லக்ஷ்மணன், சீதை, ஹனுமார் இவர்களுடைய மூல உத்ஸவ பிம்பங்கள் இருக்கின்றன. ஒருகாலத்தில் அடையவளைஞ்சான் வீதியிலுள்ள சூடிக்கொடுத்த நாச்சியார் ஸந்நதியிலிருந்த உத்ஸவ பிம்பங்களான ஆண்டாள், பெரியாழ்வார்கள், இந்தக் கோவிலுக்குக் கொண்டுவரப்பட்டு அவர்களுக்கு உத்ஸவங்கள் நடத்தப்பட்ட படியால் இதற்கும் சூடிக்கொடுத்த நாச்சியார் ஸந்நதியென்று பெயர் வந்துவிட்டது. இதன் பிறகு கோவிலுக்கு வெளியில் ஒரு ஆண்டாள் ஸந்நதியும் கோவிலுக்குள் ஒரு ஆண்டாள் ஸந்நதியுமாக ஏற்பட்டுவிட்டபடியால் வெளியிலுள்ளதை வெளி ஆண்டாள் அல்லது சூடிக்கொடுத்த நாச்சியார் ஸந்நதியென்றும், கோயிலுக்குள் இருப்பதை உள்ளாண்டாள் அல்லது உள் சூடிக்கொடுத்த நாச்சியார் ஸந்நதி என்றும் ஜனங்கள் சொல்லுகிறார்கள்.

ரங்கநாதன் மேலே சொன்ன யானை மண்டபத்திலிருந்து யானை வாகனத்தில் புறப்பட்டு வீதிவலம் வந்திறங்கி ஸந்நதிக்குச் செல்லும்போது இந்த உள்சூடிக் கொடுத்த நாச்சியார்முன் எழுந்தருளி மாலை மாற்றிக்கொண்டு ஸந்நதிக் குச் செல்கிறார். நம் நாட்டில் சில வகுப்பாரில் மணமகன் யானை ஏறிவந்து அதன் பிறகு மணந்துகொள்வது வழக்கமா யிருக்கிறது. அது போல ரங்கநாதனும் ஏழாந்திருநாளாகிய திருக்கல்யாண உத்ஸவத்தின் பொருட்டு யானை ஏற்றம், மாலை மாற்றல்களை முதல் நாளாகிய ஆறும் உத்ஸவத்தில் நடத்திக் கொள்கிறார்.

## 24. வேணுகோபாலன் ஸந்நதி

இது உள்சூடிக் கொடுத்த நாச்சியார் ஸந்நதியின் வடக்கிலுள்ளது. சில்ப வேலைகள் அமையப் பெற்றது.

## 25. வாகன மண்டபம்

இது வேணுகோபாலன் ஸந்நதிக்கு வடக்கே இருக்கி றது. இதில் ரங்கநாதனுக்கு வாகன சாத்துப்படிகள் செய் யப் படுகிறது. ரங்கநாதன் வீதி சுற்றிவந்த பிறகு வாகனத் துடன் உள்ளே பிரவேசிக்க முடியாததால் இதில் இறங்கி சாத்துப்படி களையப்பட்டு உள்ளே போகிறார்.

## 26. அமிருதகலச கருடன் ஸந்நதி

இது வாகன மண்டபத்தின் பின்புறமுள்ளது. இதி லுள்ள கருடன், கையில் அமிருத கலசத்துடன் ஸேவை ஸாதிக்கிறார். மூலபிம்பம் சிலா பிம்பம். இதைத் தயாரிக்க ஒரு சில்பி தன்னுயுள் முழுவதையும் செலவிட்டிருக்க வேணு மென்று தோற்றுகிறது. இதற்குச் சமானமான சில்பத் திறமைவாய்ந்த வேறு பிம்பங்களைக் காண்பது அரிது என்று சொல்ல வேணும்.

## 27. கூரத்தாழ்வான் ஸந்நதி

ரங்கவிலாசத்தின் கீழ்ப்புரம் நான்கு முகம் கோபுர வாசல் மதிலை ஒட்டி உள்ளது. இது ஆதியில் ஸ்ரீரங்கஸ்ரீ என்கிற திருவரங்கச் செல்வியின் கோவிலாயிருந்தது. இவள் நடனமிடும் நாடகமேடை போலிருந்ததனால்தான் இந்த க்ஷேத்திரத்திற்கு ஸ்ரீரங்கம் என்னும் பெயர் ஏற்பட காரணமாயிற்று. இவளுக்கு ஆதியில் ரதோத்ஸவம் நடந்து வந்தது. ஒரு காலத்தில் ஒரு ஜீயர் இவளுடைய தேரை ரங்கநாதனுடைய தேரென்று நினைத்து விட்டார். பிறகு திருவரங்கச் செல்வியின் தேர் என்று தெரியவே, கோயிலின் தத்வத்தை அறியாமல், ஊருக்கு வெளியில் ஒரு கோவிலைக் கட்டி மூல பிம்பத்தை அதில் சேர்ப்பித்து, மறுபடியும் திருவரங்கச் செல்வி ரத உத்ஸவம் ஏற்படாமலிருக்கும் பொருட்டு உத்ஸவபிம்பத்தைக் கோவில் கருகூலத்தில் சேர்த்து விட்டார். திருவரங்கச் செல்வியின் ஸந்நதி தற் காலம் ஸ்ரீரங்கம் ரெயில்வே ஸ்டேஷனுக்கு எதிரில் காணப் படுகிறது. திருவரங்கச் செல்விக்கு உத்ஸவமான பிறகே ரங்கநாதனுக்கு ஆதிபிரம்மோத்ஸவம் நடத்துவது வழக்கம். திருவரங்கச் செல்விக்குப் படித்தரம் ரங்கநாதன் ஸந்நதியி லிருந்து ஏற்பட்டிருக்கிறது. மேற் சொன்னபடி கலியாண ஸந்நதியில் கூரத்தாழ்வான் பிம்பம் பிரதிஷ்டை செய்யப் பட்டிருக்கிறது.

## 28. தொண்டரடிப் பொடியாழ்வார் ஸந்நதி

இது கூரத்தாழ்வான் ஸந்நதிக்கு வடக்கிலிருக்கிறது. இது ரங்கநாதனுக்குத் திருமாலை திருப்பள்ளி எழுச்சி என் னும் பிரபந்தங்களைப் பாடிக்கொடுத்த தொண்டரடிப் பொடி யாழ்வாரின் ஸந்நதி.

## 29. விட்டல் கிருஷ்ணன் சந்நதி

இது மேலே சொன்ன கோவிலுக்கு வடக்கேயுள்ளது. இதிலுள்ள விடோபா கிருஷ்ணன், உள்சூடிக் கொடுத்த நாச்சியார் ஸந்நதியிலுள்ள சீதாப்பிராட்டியின் உக்கிரத்தை சமனப் படுத்தப் பிரதிஷ்டை செய்யப்பட்டதாய்ச் சொல்லப் படுகிறது. நிர்வாணமாய் நிற்கும் புருஷன் முன், எந்த ஸ்திரீ தன் பௌருஷத்தைக் காட்டமுடியும்?

## 30. திருப்பாணாழ்வார் சந்நதி

இது விட்டல் கிருஷ்ணன் ஸந்நிதிக்கு வடக்கிலுள்ளது. உறையூரில் அவதரித்து ரங்கநாதன் விஷயமாய், அமலனாதிப் பிரான், என்னும் பிரபந்தத்தைப் பாடி, ரங்கநாதனைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே என்று சொல்லி அவர் திருவடியை யடைந்தவர் திருப்பாணாழ்வார்.

## 31. அகளங்கன் திருவீதி

இந்த வீதி, ஸ்ரீரங்கநாதனின் ஐந்தாவது பிராகாரம். அகளங்க நாட்டாழ்வான் என்னும் ராஜாவால் கட்டப்பட்டது. இந்த வீதியில் வைகாசி மாதத்தில் வஸந்தோற்சவம் நடக்கிறது. திருக்கார்த்திகை முதலான வேறு சில தினங்களிலும் பெருமாள் இந்த வீதியில் வருகிறார்.

## 32. சக்கரத்தாழ்வார் சந்நதி

இது அகளங்கன் வீதியின் தென்மேற்கு மூலையிலுள்ளது. பெருமாளுடைய சுதர்சன சக்கரத்திற்கு ஏற்பட்ட கோயிலாதலால் சக்கரத்தாழ்வார் ஸந்நதி என்று சொல்லப் படுகிறது. இந்த ஸந்நதி முன் மண்டபத்தின் மேலுள்ள சுதர்சனம் பார்ப்பவர்களுக்கு இது தன்னுடைய கோவிலென்று காட்டிக் கொடுக்கிறது.

ஸந்நிதிக்குள் மூலபிம்பம், முன்பக்கம் சுதர்சனமாயும் பின்பக்கம் நரஸிம்மனாயும் ஸேவை கொடுக்கிறார். உத்ஸவர் எட்டு புஜங்களுடன் சுதர்சனமாயிருக்கிறார். பேய்ப் பிசாசு பில்லி சூன்யம் முதலானவைகளாலும் கிங்க சாரங்களாலும் ஏற்படும் அரிஷ்டங்களைப் போக்கி அபீஷ்டங்களைப் கொடுப்பதில் பெயர்போனவர். தினமும் இவரை அநேகர் பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து வருகிறார்கள். சனிக் கிழமைகளில் தங்கள் பீடாபரிகாரமாக நெய், எண்ணெய் விளக்குகள் போட்டு வழிபடும் கூட்டம் அதிகம். ராமானுஜ நூற்றந்தாதி பாடிய திருவரங்கத்தமுதனார் இந்த ஸந்நதியின் தென்மேற்கு மூலையிலிருக்கிறார். இந்தச் சக்கரத்தாழ்வார் ரொம்பவும் உக்கிரமாயிருந்தபடியால் ஒரு காலத்தில் இவருக்கு முன் பார்த்தசாரதி பிரதிஷ்டிக்கப்பட்டு இவர் உக்கிரகளை குறைக்கப்பட்டது. எஜமான் எதிரில் எந்தச் சேவகன் தன் பௌருஷத்தைக் காட்டமுடியும்.

## 33. வசந்த மண்டபம்

இது சக்கரத்தாழ்வார் கோவிலை ஒட்டி வடக்கிலுள்ள தோப்பிலுள்ளது. இதில் வைகாசி மாஸத்தில் ரங்கநாதனுக்கு வஸந்த உத்ஸவம் நடக்கிறது.

## 34. ஸ்ரீரங்கநாச்சியார் சந்நதி

இது வஸந்த மண்டபத்திற்கு வடபுறம் அகளங்கன் திருவீதி வடமேற்கிலிருக்கிறது. இது ரங்கநாதனின் மஹிஷிகளுக்குள்பட்ட மஹிஷியாகிய ஸ்ரீரங்க நாச்சியாரின் ஸந்நதி. இவர் படிதாண்டாப் பத்தினியாய் இந்தக்கோவிலுக்கு வெளியில் போவதில்லை. இவருக்கு உத்ஸவங்களெல்லாம் இந்த ஸந்நதிக்குள்ளேயே நடக்கிறது.

இந்த ஸந்நதியில் இரண்டு மூலநாச்சிமார்களும் ஒரு உத்ஸவரும் இருக்கிறார்கள். துலுக்கர் படையெடுப்பில் ரங்கநாதன் ஊரைவிட்டு வெளியே சென்று விட்டார். மூல நாச்சியார் பூமிக்குள் பத்திரப் படுத்தப்பட்டார். கலகம் தீர்ந்த பின் தேடிக் கிடைக்காததனால் வேறொரு பிம்பம் பிரதிஷ்டை செய்யப்பட்டது. ரங்கநாதன் ஸந்நதிக்கு வந்த பிறகு பழய நாச்சியார் வெளித் தோன்றினார். அவரையும் அர்த்த மண்டபத்தில் பிரதிஷ்டை செய்தார்கள். இந்தக் காரணத்தினால் இரண்டு மூலநாச்சியார்கள் ஏற்பட்டார்கள்.

இந்தத் தாயாருக்கு முக்கியமான நவராத்திரி உத்ஸவம் ஸந்நதி வாசலிலுள்ள மண்டபத்தில் நடக்கிறது. மற்ற உத்ஸவங்கள் பிராகாரத்திலுள்ள மற்ற மண்டபங்களில் நடக்கிறது. பிராகாரத்தின் தென்மேற்கு மூலையிலுள்ள மண்டபத்தில் பங்குனி உத்திரதினம், பிரணயகலகோத்ஸவம் (மட்டையடி) ஆன பிறகு ரங்கநாதனும் ஸ்ரீரங்க நாயகியும் ஏக ஆசனத்தில் வீற்றிருந்து ஸேவை ஸாதிக்கிறார்கள். அது ஒரு விசேஷ ஸம்பவம். இந்தச் சேர்த்தியில் ஜனங்கள் தங்கள் சக்திக்குத் தக்கபடி திருவிளக்கு ஸமர்ப்பித்தல், அர்ச்சனைசெய்தல், தளிகை ஸமர்ப்பித்தல் முதலிய கைங்கர்யங்களைச் செய்யத் தவறமாட்டார்கள். பிராகாரத்திலுள்ள உயர்ந்த மண்டபத்தில் விஷ்ணு புராணக்கதைகள் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன.

பங்குனி உத்திர மண்டபத்தில் ஸ்ரீராமாயணத்தில் முக்கிய புருஷர்களான ராமன் லக்ஷ்மணன் ஸீதை விபீஷணர் சுக்ரீவன் ஜாம்பவான் ஹனுமார் இவர்களின் பிம்பங்கள் செதுக்கப்பட்ட கல்தூண்கள் காணப்படுகின்றன. இந்த மண்டபத்தின் கீழ் உள்ள பத்தியில் இருக்கும் கம்பங்களில் நாச்சியாரின் அத்யயன உத்ஸவம் இந்த மண்டபத்திலேயே

நடத்தும் பொருட்டு ஆழ்வார்களின் பிம்பங்கள் அமைக்கப் பட்டிருக்கின்றன.

இந்த ஸந்நதியின் வடவண்டை பிராகாரத்தில் வில்வமர மிருக்கிறது. இதனடியிலுள்ள மண் உத்ஸவங்களில் பாலிகை தெளிக்க எடுக்கப்படுகிறது. வில்வ மரத்துக்குக் கிழக்கிலுள்ள பிருந்தாவனத்தின் கீழ், படையெடுப்பில் மூல நாச்சியார் பூமியில் பத்திரப் படுத்தப்பட்டிருந்ததால் அந்த இடத்தை ஒருவரும் மிதிக்காமலிருக்கும் பொருட்டு இந்தப் பிருந்தாவனம் கட்டியிருப்பதாயும் சொல்லப்படுகிறது.

இந்த நாச்சியார் ஸந்நதிக்கு விசேஷ கைங்கர்யங்களும் உத்ஸவங்களும் திரிச்சிராப்பள்ளியிலிருந்து அரசாண்ட நாயக்கர் வம்சத்தார்களால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. அவர்களுடைய பிம்பங்கள் ஸ்ரீரங்க நாச்சியாரின் ஹஜார வாசலாகிய முன் வாசலில் வைக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீரங்க நாச்சியார் ஸந்நதியின் முன்புள்ள விசால மண்டபத்தில் பங்குனி உத்திரதினம், ரங்கநாதனுக்கும் தாயாருக்கும் பிரணய கலக ஸம்வாதங்கள் நடக்கின்றன.

## 35. மேட்டு அழகிய சிங்கர் ஸந்நதி

இது தாயார் ஸந்நதிக்குக் கிழக்கில் வெகு உன்னத மான இடத்திலிருக்கிறது. கம்பர் தாம் பாடிய ராமாயணத் தில் ஹிரண்யவதைப் படலத்தைச் சேர்த்திருப்பதை, ராமா யணம் அரங்கேற்றுப்படி பண்ணும் காலத்தில் ஆக்ஷேபிக்கப் பட்டது. அதற்குப் பெருமாள் உகந்தால் ஆக்ஷேபனை இல் லையே என்று கம்பர் சொன்னார். சபையிலுள்ளோர் அதை ஒப்புக்கொள்ள இந்த ஸந்நதி முன் நரசிம்ம அவதார கட்டத் தைப் படித்தார்; உடனே அந்த நரசிம்மன் தாம் எழுந்தருளி யிருக்கும் கோபுரத்திலிருந்து, தாம் உகந்ததற்கு அடையாள மாகக் கர்ஜித்தார். அதுமுதல் அந்த நரசிம்மனுக்குக் கோவில்

கட்டப்பட்டு மூன்று காலம் ஆராதனம் நடந்துவருகிறது. இவர் ஹிரண்யனை மடியிலிட்டுக்கொண்டு கிழித்து அவன் குடலை மாலைபோட்டுக்கொண்ட மாதிரி எழுந்தருளி யிருக்கிறார்.

## 36. வேதாந்த தேசிகர் சந்நதி

ஸ்ரீரங்க நாச்சியார் ஸந்நதிக்குக் கிழக்கில் கோபுரவாசலை ஒட்டி வைணவ சமயாசாரியர்களில் ஒருவரான தேசிகர் ஸந்நதி இருக்கின்றது.

## 37. பெரியவாச்சான்பிள்ளை சந்நதி

இது மேட்டு அழகிய சிங்கர் ஸந்நதிக்குக் கிழக்கில்ஆயிரக் கால் மண்டபத்துக்குப் போகும்வழியி லிருக்கிறது. இதில் திராவிட பிரபந்தங்கள் எல்லாவற்றிற்கும், முக்கியமான ராமாயண ஸ்லோகங்களுக்கும், இன்னும் அநேக கிரந்தங் களுக்கும் வியாக்கியானங்கள் அருளிச்செய்து, "வியாக்யான சக்கரவர்த்தி" என்று அழைக்கும் படியான பெரியவாச் சான் பிள்ளை என்னும் வைஷ்ணவ ஸமயாசாரியர் தம் இஷ்ட தெய்வமான திருவேங்கடமுடையானுடன் இருக்கிறார்.

## 38. ஆயிரக்கால் மண்டபம்

இது மேற்சொன்ன ஸந்நதிக்குக் கிழக்கிலிருக்கிறது. ஆயிரம் கல் தூண்கள் நிறுத்தி அமைக்கப்பட்டிருக்கிறது. இதன் மத்தியிலுள்ள மண்டபத்திற்குத் "திருமாமணி மண்டபம்" என்று பெயர். இது பரமபதவர்ணனையில் சொல்லப்பட்டிருக் கிறபடி கட்டப்பட்டிருக்கிறது. இந்த மண்டபத்தில் ரங்க நாதன் தமது முக்கிய உத்ஸவமாகிய அத்யயன உத்ஸவம் இராப்பத்து திருநாளில் ஆழ்வார் ஆசாரியர்களுடன் எழுந் தருளியிருந்து திராவிட வேதமாகிய திருவாய்மொழியைக் கேட்டருளி, அதைப் பாடிய நம்மாழ்வார் தன் திருவடியை

அடைந்த பிராகாரத்தைக் காட்டியருளுகிறார். இதில் நடக்கும் உத்ஸவம் இரவில் பத்துநாள் நடப்பதனால் அதற்கு இராப் பத்து என்று பெயராயிற்று.

ஆயிரக்கால் மண்டபத்தின் வடக்கு கோடியிலுள்ள மண்டபத்தில் சங்கராந்தி தினம் ரங்கநாதன் எழுந்தருளி, ஆண்டாளால் பாடப்பட்டு மார்கழி மாதம் முப்பது நாளும் ஸேவிக்கப்பட்டுவந்த திருப்பாவை சாற்றுமுறை (முடிவு) செய்யப்படுகிறது.

ஆயிரக்கால் மண்டபத்தின் தெற்கு கோடியிலுள்ள கனு மண்டபத்தில் கனு பண்டிகைக்கு ரங்கநாதன் எழுந் தருளி, பரி வேட்டைக்குக் குதிரை ஏறி செல்லுகிறார்.

மேற்படி மண்டபத்திற்குத் தெற்கில் ஒருதிறந்த வெளி யிருக்கிறது. இதில் பரமபத ஏகாதசி முதல் நடக்கும் இராப் பத்தில் ரங்கநாதன் பத்தி உலாவவும் ஆழ்வார் முதலானவர் களுக்கு மரியாதைசெய்யவும் ஒருபெரிய கொட்டகை போடப் படுகிறது. சங்கராந்தி கனு கழிந்தவுடன் பிரிக்கப்படுகிறது.

## 39. வெள்ளைக் கோபுரம்

மேற்படி கொட்டகை போடும் இடத்திற்குக் கிழக்கே ஒரு பெரிய கோபுரமிருக்கிறது. ஸ்ரீரங்கம் கோவில் கோபு ரங்களுக்குள் உயர்ந்த கோபுர மிதுவே. வர்ணம் பூசாமல் வெள்ளையா யிருப்பதனால் வெள்ளைக்கோபுரமென சொல்லப் படுகிறது.

## 40. கல்குதிரை மண்டபம்

இது வெள்ளைக் கோபுர வாசலை ஒட்டி தென்புறமிருக் கிறது. இந்த மண்டபத்தின் வடபுறத்திலுள்ள எட்டுக் கல் தூண்களில் சில்பகலையின் உன்னத திறமையை எடுத்துக்காட் டக் கூடியவகையில் குதிரைகளும், அதன்பேரில் சவாரி செய் கிறவர் முதலானவைகளும் வெகு விசித்திரமாகச் செதுக்கப்

பட்டிருக்கின்றன. அந்தக் குதிரைகள் அந்த மண்டபத்தில் இருக்கும் நிமித்தம் அதற்குக் கல்குதிரை மண்டபம் என்று பேராயிற்று.

## 41. பிள்ளைலோகாசாரியார் சந்நதி

இது கல்குதிரை மண்டபத்திற்குத் தெற்கில் இருக்கிறது. இதில் அநேக வைஷ்ணவ ரகஸ்ய கிரந்தங்களைச் செய்திருக்கிற பிள்ளைலோகாசாரியார் என்னும் வைணவ சமய குரு இருக்கிறார்.

## 42. பார்த்தசாரதி கோவில்

பிள்ளைலோகாசாரியார் கோவிலுக்குத் தெற்கிலும் சக்கரத்தாழ்வார் ஸந்நதிக்கு எதிரிலும் இந்தக் கோவிலிருக்கிறது. சக்கரத்தாழ்வாரின் உக்கிரத்தை அடக்க இது உண்டாக்கப்பட்டது. அர்ச்சுனனுக்குக் கீதை உபதேசம் பண்ணினபடி ஸேவை கொடுக்கிறார்.

## 43. உடையவர் சந்நதி

பார்த்தசாரதி சந்நதிக்குத் தெற்கிலுள்ள இந்தக்கோவில் விசிஷ்டாத்வைதசித்தாந்தஸ்தாபகரான ராமாநுஜருடையது. இது ஆதியில் ரங்கநாதனின் வசந்த மண்டபமாயிருந்தது. ராமானுஜர் காலகதியானவுடன் அவருடைய திவ்ய சரீரத்தைத் தமது வசந்த மண்டபத்திலேயே திருப்பள்ளிபடுத்தும்படி (சமாதி செய்யும்படி) ரங்கநாதன் கட்டளையிட்டார். அவர் ஆக்ஞையின்படி ராமானுஜரின் திருமேனி இந்த இடத்தில் பூமியில் பத்திரப்படுத்தப்பட்டது.

ராமானுஜருக்கு உடையவர் என்னும் பெயர் ரங்கநாதனால் அளிக்கப்பட்டபடியால் அந்தப் பெயரையிட்டே அவரையும் அவருடைய சந்நதியையும் வைஷ்ணவர்கள் அழைப்பார்கள்.

இதில் உத்ஸவர் ரங்கநாதனைச் சேவித்தவண்ணம் அஞ்சலி ஹஸ்தரா யிருக்கிறார். மூலவர் ஞானோபதேசம் பண்ணும் பாவனையாய் சேவை சாதிக்கிறார்.

ரங்கநாதனுடைய நியமனப்படி பிரதிதினமும் திராவிட வேத பாராயணம் இந்தச் சந்நிதியில் நடக்கிறது. ஸ்ரீவைஷ்ணவ தர்மத்தை நிலைநாட்ட இவர் அநேக கிரந்தங்கள் செய்திருந்தாலும் மோக்ஷ சித்திக்காக, ரங்கநாதனிடம் இவர் விண்ணப்பம் செய்துகொண்டு அதற்கு அவர் அப்படியே ஆகட்டும் என்று பதிலளித்த (கத்தியத் திரயம் என்னும்) கிரந்தம் ராமாநுஜரால் பங்குனி உத்திர தினத்தில் ரங்கநாதனும் ரங்கநாயகியுமான சேர்த்தியில் விண்ணப்பம் செய்ததன் ஞாபகார்த்தமாக நாளைக்கும் பங்குனி உத்திரத்தின்று ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீரங்கநாயகி முன்னிலையில் கோவில் அத்யாபகர்களால் சேவிக்கப்படுகிறது.

உடையவருக்கு ஏற்பட்டுள்ள ஸந்நிதிகளுக்குள் இதில் அவருடைய சுயம் திருமேனியே இருப்பதால் இது மிகவும் விசேஷமானதென்று வைஷ்ணவர்களால் போற்றப்படுகிறது. இந்த ஸந்நதியின் மண்டபத்தில் உடையவருடைய சரித்திரம் சித்திரத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

திருவரங்கத் தமுதனார் உடையவர் விஷயமாய்ப் பாடியுள்ள ராமாநுஜ நூற்றந்தாதி என்னும் பிரபந்தத்தை, ரங்கநாதன் தம்முடைய ஒவ்வொரு பிரம்மோத்ஸவம் பத்தாம் திருநாளில் வீதிவலம் வரும்போது கேட்டுக்கொண்டு இந்த ஸந்நதிக்கு வந்து உடையவரால் செய்யப்படும் ஆதிக்கியத்தைப் பெற்று உடையவருக்கு ம்ரியாதை செய்கிறார்.

## 44. புத்தகசாலையும் பொருள்காட்சி சாலையும்

உடையவர் ஸந்நதி முன் மண்டபத்திற்கு மேற்கில் மதிலையொட்டி ஆதியில் அஸ்வ சாலையாயும் கோசாலையாயும்

இருந்த கட்டிடம் இப்போது *புத்தகசாலை-பொருட்காட்சிச் சாலைகளாக மாற்றப்பட்டிருக்கிறது. இதில் அநேக புத்தகங் களும், விக்கிரகங்களும், தந்தத்தினால் செய்யப்பட்ட பிர திமைகளும், அநேக அபூர்வப் பொருள்களும் இருக்கின்றன.

### 45. ஆலிநாடன் திருவீதி

இது ரங்கநாதனின் நான்காவது பிராகாரம். இதை ஆலிநாடன் என்னும் திருமங்கை யாழ்வார் உண்டாக்கினபடி யால் ஆலிநாடன் திருவீதி யென்று பெயரிடப்பட்டது.

### 46. சொக்கப்பனைக் கோடவாசல்

இது அகளங்கன் திருவீதியாகிய ஐந்தாம் பிராகாரத்தி லிருந்து நான்காம் பிராகாரத்திற்குச் செல்லும் வாசல். திருக் கார்த்திகை தினம் சொக்கப்பனை இந்த வாசலுக்குமுன் ஐந் தாம் பிராகாரத்தில் கொளுத்தப் படுகிறபடியால் இந்த வாச லுக்கு இந்தப் பெயருண்டாயிற்று.

### 47. கங்கையும் யமுனையும்

மேற்படி வாசலுக்கு இவர்கள் துவாரபாலகர்களா யிருக்கிறார்கள்.

### 48. கருட மண்டபம்

மேற்சொன்ன வாசல் வழியாய் உள்ளே சென்றால் விசாலமான இந்த மண்டபமிருக்கிறது. இந்த இடத்தில்

---

*கோயிலுக்குச் சொந்தமான விலை உயர்ந்த திருவாபரணங் கள், வாகனங்கள் முதலானவைகள் இதில் வைப்பதில்லை. அவைகள் விலையுயர்ந்தவையா யிருப்பதனால் கோயிலுக்குள் பந்தோபஸ்தான இடத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. இதை முக்கியமாய்ப் பார்க்க வேண்டுமானால் எண்டோமெண்ட் போர்டார் அவர்கள் உத்தரவுப் படி முன்னதாகவே தேவஸ்தானம் ஆபீசில் ரூ. 50 கட்டணம் கட்டி மனுசெய்து அனுமதி பெற்றால் காண்பிக்கப்படும்.

ஆதியில் பக்ஷிராஜன் தோப்பு என்று ஒரு தோப்பும் அதன் மத்தியில் கருடன் ஸந்நதியுமிருந்தன. அந்தத் தோப்பு திருமலை நாயக்கர் காலத்தில் அழிக்கப்பட்டு இந்த மண்டபம் கருட ஸந்நதியைச் சுற்றி நிர்மாணிக்கப்பட்டது. கருடன் ஸந்நதிக்கு முன்னுள்ள இரண்டு கல் தூண்களில் திருமலை நாயக்கருடையவும் அவருடைய குடும்பத்தாருடையவும் பிம்பங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன.

## 49. கருடன் கோவில்

கருடன் மண்டபத்தின் தென்புறத்தில் மத்தியில் இந்தக் கோவிலிருக்கிறது. இதில் சுதையில் செய்யப்பட்டு, சித்திர கலாபம் பண்ணப்பட்ட அதிக உன்னதமான கருடன் உட்கார்ந்தவண்ணம் காட்சியளிக்கிறார். இவ்வளவு பெரிய பிம்பம் தென்னிந்தியாவில் காண்பதரிது. இவருக்கு முன்னிருந்த தாம்பிர விக்கிரகம் துருக்கர் படையெடுப்பில் அழிக்கப்பட்டு விட்டதாகச் சொல்லப்படுகிறது.

இந்தக் கோவிலின் முன்னுள்ள நாலுகால் மண்டபத்தில் பகல் பத்து பத்தாம் திருநாள் ராத்திரி ரங்கநாதன் மோகினி அவதாரத்துடன் வந்துநின்று ஜனங்களுக்கு ஸேவை கொடுக்கிறார்.

## 50. நம்மாழ்வார் ஸந்நதி

இது கருட மண்டபத்திற்கு மேல்புறமிருக்கிறது. இதில் வேதம் தமிழ் மாறன் என்று வைஷ்ணவர்களால் கொண்டாடப்படுபவரும் ரங்கநாதரால் நம்மாழ்வாரென்று அழைக்கப்பட்டவரும் சடகோபனென்று மற்றொரு பெயருடையவரும், கம்பரால் சடகோபர் அந்தாதிபாடிப் போற்றப்பெற்றவரும் ஸ்ரீவைஷ்ணவகுல சிகாமணியான நம்மாழ்வார், தாம் பாடிய நான்கு தமிழ் வேதங்களுக்கும் அங்கங்களாக ஆறு பிரபந்தம் பாடிய திருமங்கை ஆழ்வாருடனும், தமது சிஷ்யராய்,

தம் விஷயமாய் "கண்ணினுண் சிறுத்தாம்பு" என்னும் பதிகத்தைப் பாடியுள்ளவருமான மதுரகவி யாழ்வாருடனும் எழுந்தருளியிருந்து வைஷ்ணவ சமூகத்தை மகிழ்விக்கிறார்.

## 51. திருக்கச்சி நம்பி சந்நதி

இது கருட மண்டபத்தின் தென் கிழக்கு மூலையிலிருக்கிறது. திருக்கச்சி நம்பி வைஷ்ணவ ஆசார்யரவர்களில் ஒருவர். இவருக்கு உடையவரிடத்தில் அதிக பிரேமை உண்டு. உடையவருக்கும் இவரிடத்தில் அத்யந்த பக்தி உண்டு. இவருடைய சேஷ பிரஸாதத்தைப் புசிக்கவேண்டுமென்று உடையவர் ஆசைப்பட்ட படியால் நாளைக்கும் இவருக்கு நிவேதனமான பிரஸாதம் உடையவருக்கு நிவேதனம் செய்யப்படுகிறது.

## 52. கோட்டாரம்

இது நம்மாழ்வார் ஸந்நதிக்கு மேற்கிலும் ஆலிநாடன் திருவீதியின்தென்மேற்கு மூலையிலுமிருக்கிறது. இதில் ரங்கநாதனுடைய ஸந்நதி செலவுக்குத் தேவையான நெல் முதலான ஸகல ஸாமான்களும் சேகரித்து வைக்கப்படுகிறது. கடுகு மிளகு முதலான ஸம்பாரங்களும் நெல்லும் கொட்டிவைக்கும் பொருட்டுத் திருமங்கையாழ்வாரால் கட்டப்பட்ட பழைய கட்டிடங்கள் இருக்கின்றன. இதை ஸந்நதிக்குவரும் யாத்திரீகர்கள் பார்த்துவிட்டுப் போகிறார்கள்.

## 53. மேல் பட்டாபிராமன் சந்நதி

இது கொட்டாரத்துக்கு வடக்கில் இருக்கிறது. இந்த ஆலி நாடன் திருவீதியில் கீழ்ப்புறம் ஒரு ராமன் ஸந்நதி ஏற்பட்ட நிமித்தம் மேல்புறமுள்ள இந்த ஸந்நதி இப்பெயரால் அழைக்கப்படுகிறது.

## 54. முதலாழ்வார் சந்நதி

இது மேற்படி கோவிலுக்கு வடக்கிலுள்ளது. இதில் ஆழ்வார்களுக்குள் முதலில் தோன்றியவர்களாகிய பொய்கை, பூதம், பேயார் என்னும் ஆழ்வார்கள் இருக்கிறார்கள்.

## 55. தீர்த்தக்கரை வாசுதேவப் பெருமாள் ஸந்நதி

இது முதலாழ்வார் கோவிலுக்கு வடக்கிலிருக்கிறது. நம் நாட்டிலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் தீர்த்தமாடுமுன் தியானிப்பதற்கும் தீர்த்தமாடினபின் அர்க்கியம் முதலானது கொடுத்து, அந்த தீர்த்தத்திற்குரிய தேவதையை வழிபடுவதற்கும் அந்தந்த தீர்த்தக்கரைகளில் அந்தந்தத் தேவதைகளின் பிம்பங்களுக்குக் கோயில்கள் அமைத்து வைப்பது வழக்கம். அதுபோல சந்திர புஷ்கரணிக்கு அதிதேவதையான வாசுதேவப் பெருமாளுக்குச் சந்திர புஷ்கரணிக்கு எதிரில் இந்தக் கோவில் கட்டப்பட்டிருக்கிறது.

## 56. தன்வந்திரி கோவில்

உடையவர் (ராமாநுஜர்) காலத்தில் அவருடைய மருமகனும் சிஷ்யருமான முதலியாண்டான் பெருமாளுக்குத் ததியோதனத்துடன் நாவல் பழத்தையும் நிவேதனம் பண்ணி கைங்கரியபரர்களுக்கும் சேவார்த்திகளுக்கும் கொடுக்க அதனால் கபதோஷமுண்டாக அந்தத் தோஷத்தை நிவர்த்திக்க ரங்கநாதனுடைய கட்டளைப்படி, கருடவாகன பண்டிதர் தேவ வைத்தியராகிய தன்வந்திரியைப் பிரதிஷ்டிப்பித்து ஒரு கஷாயம் தயாரித்துப் பெருமாளுக்கு நிவேதனம் பண்ணிக் கைங்கர்யபரர்களுக்கும் மற்றவர்களுக்கும் கொடுக்கும்படி ஏற்பாடுசெய்து, அவ்விடம் ஒரு ஆரோக்கிய சாலையையும் உண்டாக்கி வைத்தார்.

## 57. ஐந்து குழி மூன்று வாசல்

மேற்படி கோயிலை ஒட்டியுள்ள கோபுரவாசலில் தெற்கு, கிழக்கு, மேற்கு மூன்று பக்கங்களிலும் இந்தக் கோபுரத்திலிருந்து வெளியில் செல்ல வழியிருக்கிறபடியாலும் இந்தக் கோபுர வாசலில் ஒரு இடத்தில் ஐந்து குழிகள் இருக்கிறபடியாலும் இந்தப் பெயர் ஏற்பட்டது.

## 58. சந்திர புஷ்கரணி

மேற்படி வாசலுக்குக் கிழக்கில் சந்திர புஷ்கரணி இருக்கிறது. இது ரங்கநாதனுடைய ஒன்பது தீர்த்தங்களில் நிரம்பவும் முக்கியமானது. சந்திரன் தனக்கு ஏற்பட்ட சாபத்தைத் தீர்த்துக்கொள்ள இதில் தீர்த்தமாடிப் புன்னை மரத்தடியிலிருந்து தபசு பண்ணி, தனது சாபம் தீரப் பெற்றான். மற்றத் தீர்த்தங்கள் சப்த பிராகாரத்திற்கு வெளியில் இருக்கின்றன.

ரங்கநாதனுடைய அருளால் காவேரி கங்கையைக் காட்டிலும் புனிதமாயும் மேற்பட்டவளாயுமாய் விட்டபடியால், கங்கை துலாமாசத்தில் காவேரிக்கு வந்து தீர்த்தமாடுவதாக ஒரு ஐதிகமுண்டு. அவ்வளவு பெருமை வாய்ந்த காவேரி, மற்ற எல்லாப் புண்ய தீர்த்தங்களுடன் சந்திர புஷ்கரணியில் ஸ்நாநம் செய்ய வருகிறாள் என்று புராணம் பேசுகிறது. ஆனபடியால் சந்திர புஷ்கரணிக்கு மேலான தீர்த்தம் இல்லவே இல்லை. இதற்குக் காரணதேவதையான வாசுதேவப்பெருமாள் (சந்நதி) மேலண்டை கரையிலிருக்கிறார்.

வருணபகவானால் ஸ்ரீரங்கவிமானத்தின் பேரில் வருஷிக்கும் தீர்த்தம் முழுவதும் சந்திர புஷ்கரணியிலேயே வந்து சேர்ந்து சந்திர புஷ்கரணியின் புனிதத்தை அதிகரிக்கச் செய்கிறது.

பங்குனி உத்சவம் நீங்கலாக மற்ற எல்லா உத்சவங்களி லும் ரங்கநாதன் இந்தச் சந்திர புஷ்கரணியில் தீர்த்தம் சாதிக்கிறார். பங்குனி உத்சவத்தில் மட்டும் கொள்ளிடத்தில் தீர்த்தம் சாதிக்கிறார்.

## 59. புன்னை விருக்ஷம்

சந்திரன் இந்த மரத்தடியிலிருந்து தபசு பண்ணி அவனது அபீஷ்டத்தை அடைந்தான். அதுபோல் யார் இந்த மரத்தடியிலிருந்து தியானமோ, தபசோ, தானமோ செய்கிறார்களோ (அவர்களுக்கு) அவைகள் ஒன்றுக்கு ஆயிர மாய் விர்த்தியாக்கிக் கோடிக்கணக்கில் பலனைக் கொடுக் கிறது.

## 60. ராமன் சந்நதி

இது சந்திர புஷ்கரணியின் கீழண்டைக்கரையில் இருக் கிறது. ஆதியில் சப்த பிராகாரங்களுக்கும் வெளியில் நாலு பக்கங்களிலும் நான்கு கோவில்களிருந்தன. நான்கு பக்க மூலைகளிலும் இருக்கும் கோவில்களில் பழுது ஆகாமல் மிகுந்தது தசாவதாரப் பெருமாள் கோவில். அது நீங்க மற்றக் கோவில்கள் நாளடைவில் சிதலமாய்ப் போய் அதி லுள்ள பிம்பங்கள் கோவிலுக்குள் கொண்டுவரப்பட்டன. இந்த ராமன் கோவில் ஆதியில் திருவானைக்காவலுக்குப் பக்கத்திலுள்ள தோப்பிலிருந்தது. அவ்விடமிருந்த பிம்பங் கள் இவ்விடம் கொண்டுவந்து பிரதிஷ்டை செய்யப் பட்டது.

ரங்கநாதனிடத்துள்ள அத்யந்த பக்தியினால் பெருமாள் திருமொழியென்னும் பிரபந்தம் பாடியவரும், ரங்கநாதனின் மூன்றும் பிராகாரம் கட்டினவருமான குலசேகராழ்வார் இந்த ஸந்நதியிலிருக்கிறார்.

## 61. பரமபதநாதன் சந்நதி

இதில் பரமபதநாதனென வைகுண்ட நாராயணன், தன் பக்தர்களான ஆழ்வாராதிகளுடன் எழுந்தருளி இருக்கிறார். ஆதிசேஷன்பேரில் ஸ்ரீதேவி, பூதேவி, நீளாதேவி என்கிற மூன்று நாச்சிமார்களுடன் உட்கார்ந்திருக்கிறார். காவேரிக்குப் பெருமாள் வரம்கொடுத்தவுடன் ஏற்பட்ட அனந்தபீடம் இது தான். ரங்கநாதன் எழுந்தருளுவதற்கு முன்னிருந்தே இந்த க்ஷேத்திரத்தில் இருந்துவருகிறார். ஆயிரக்கால் மண்டபம் ஏற்படுவதற்குமுன் இந்த சந்நதி வாசலில்தான் இராப்பத்து உத்சவம் நடந்துவந்ததாகச் சொல்லப்படுகிறது. வைஷ்ணவ ஆசார்யர்களில் பட்டரும், மணவாள மாமுனிகளும் இவரை மங்களாசாசனம் செய்திருக்கிறார்கள். இந்த சந்நதியில் பிள்ளை லோகாசாரியார் காலக்ஷேபம் பண்ணினபடியால் அவர் திரு நக்ஷத்திரம் இந்தக் கோவிலில் முதலில் நடக்கிறது. இது ஒரு புராதன சந்நதி.

## 62. கோடை மண்டபம் என்னும் பூச்சாத்தும் மண்டபம்

கோடைக்காலமாகிய சித்திரை மாதத்தில் சுக்லபக்ஷத் தில் பெருமாள் இந்த மண்டபத்தில் புஷ்பம்சாத்திக்கொண்டு சைத்யோபசாரங்கள் செய்யப்பெற்று, பத்தி உலாவி, சந்நதிக் குத் திரும்பிச் செல்கிறார். உத்சவத்தின் பின் ஐந்து நாள் துறை மண்டபத்தில்தங்கி, திருவாராதனை முதலானவை கண் டருளி, வீணை வாத்தியத்துடன் சந்நதிக்கு எழுந்தருளுகிறார்.

## 63. ஸ்ரீபண்டார மண்டபம்

இது ஆலிநாடன் திருவீதி தென்கிழக்கு மூலையிலுள் ளது. இதில் பெருமாளுக்கு ஸ்ரீஜெயந்தி உத்சவம் நடக்கிறது.

## 64. திருமழிசையாழ்வார் சந்நதி

இது மேற்படி மண்டபத்தின் வடக்கிலுள்ளது. இவர் வைஷ்ணவ ஆழ்வார்களில் ஒருவர். சைவத்தில் இவர் சிவ வாக்கியராக விளங்கினர்.

## 65. ஆரியப்படாள் வாசல்

இது ஆலிநாடன் திருவீதியிலிருந்து மூன்றும் பிராகாரத்திற்கு நுழையும் கோபுரவாசல். ஆதியில் வடக்கேயிருந்து வந்த ஆரியப் பிராமணர்களால் காவல் புரியப்பட்டதால் இந்தப் பெயர் உண்டாயிற்று. இந்த வாசலுக்குக் கருடனும் சக்கரத்தாழ்வாரும் துவாரபாலகர்களா யிருக்கிறார்கள்.

## 66. குலசேகரன் திருவீதி

ரங்கநாதனின் மூன்றும் பிராகாரமான இது குலசேகராழ்வாரால் உண்டாக்கப்பட்டதால் அவர் பேரால் அழைக்கப்படுகிறது.

## 67. திருப்பவித்திர மண்டபம்

இது ஆரியப்படாள் வாசலுக்கு மேல்புரமுள்ளது. குலசேகராழ்வாரால் கட்டப்பட்டது. இதில் ஆவணி மாதத்தில் ரங்கநாதனுக்குத் திருப்பவித்திர உத்சவம் நடக்கிறது. இந்த மண்டபத்தின் பின்னல் ஹயக்ரீவர் ஸரஸ்வதி சந்நதிகளிருக்கின்றன.

## 68. துவஜாரோகண மண்டபம்

இது ஆரியப்படாள் வாசலுக்குக்கிழக்கில் இருக்கிறது. இந்த மண்டபத்திலுள்ள தேரில் ரங்கநாதன் எழுந்தருளி பிரம்மோத்சவத்தில் எதிரிலுள்ள துவஜஸ்தம்பத்தில் துவஜாரோஹணம் செய்யக் கட்டளையிடுகிறார். இந்த மண்டபத்தின் கிழக்கில் நெய் சேகரித்துவைக்கும் நெய்கிணறு இருக்கிறது.

## 69. ஹநுமார்

இவர் துவஜாரோஹண மண்டபத்தினுடைய வட மேற்கு மூலையிலுள்ள ஒரு தூணின்கீழ் ரங்கநாதனை சேவித்தபிரகாரம் இருக்கிறார். இவர் நிரம்பவும் வரப் பிரஸாதி. இவருக்கு அநேக பிரார்த்தனைகளும் திருமஞ்ச னங்களும் அடிக்கடி நடந்துகொண்டிருக்கும். தேவஸ்தா னத்திலிருந்தே இவருக்குத் தினமும் திருமஞ்சனம் நடக் கிறது.

## 70. ஊஞ்சல் மண்டபம்

இது துவஜாரோஹண மண்டபத்திற்கு மேற்கிலுள் ளது. இதில் ரங்கநாதனுக்குத் துலா மாதம் கிருஷ்ண பக்ஷம் ஏகாதசியோடு முடிவாகிற ஊஞ்சல் உத்சவம் நடை பெறுகிறது.

## 71. துவஜஸ்தம்பம்

இது ஆரியப்படாள் வாசலுக்கு நேரிலிருக்கிறது. இதில் தை, பங்குனி, சித்திரை மாதங்களில் நடக்கும் பிரம் மோத்சவங்களில் கருடபடமாகிய துவஜம் (கொடி) ஏற்றப் படுகிறது. இதில் கோவிலின் காவலாளியாகிய கருப்பண்ண னூர் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

## 72. பலிபீடம்

இது மேற்படி ஸ்தம்பத்திற்குப் பின்னால் இருக்கிறது. இதில் பெரியபெருமாள் தொடங்கிக் கோவிலிலுள்ள சகல தேவதைகளும் ஆவாஹனம் செய்யப்பட்டிருக்கிறார்கள். பெரியபெருமாளை உத்தேசித்துத் திருமஞ்சனம் இந்தப் பலிபீடத்திற்குச் செய்வது வழக்கம். மழையில்லாமல் போனாலும், வேறு அரிஷ்டங்கள் ஏற்பட்டாலும், மழை பெய்வதற்கும் அரிஷ்டநிவர்த்திக்கும் பலிபீடத்திற்குக்

கால்மண்டலம், அரைமண்டலம் என்கிற மண்டலக்கணக்கில் காவேரியிலிருந்து மேளவாத்தியம் வேதபாராயணங்களுடன் திருமஞ்சனம் கொண்டுவந்து திருமஞ்சனம் பண்ணித் தளிகைகள் சமர்ப்பிப்பது வழக்கம்.

மேற்சொல்லிய துவஜாரோஹண ஸ்தம்பத்தினுடைய வும் பலிபீடத்தினுடையவும் முன்னால் கிராமாந்தரங்களி லிருந்துவரும் விவசாயிகள், ரங்கநாதனை வழிபட்டுத் தங்கள் காணிக்கை முதலானவைகளைச்செலுத்துகிறார்கள். மாவிளக்கு முதலானவை போடுகிறார்கள். ரங்கநாதனும் அவர்களுடைய வழிபாடுகளை ஏற்றுக்கொண்டு ஆவேசமுகமாய் அவர்கள் கோரும் வரங்களை அனுக்கிரகிக்கிறார்.

## 73. துரை பிரதக்ஷணம்

குலசேகரன் திருவீதியின் மேல் பாகத்துக்குத் துரை பிரதக்ஷணம் என்று பெயர். இதன் வடவண்டை மூலையில் விஜயரங்க சொக்கநாத நாயக்கரால் கட்டப்பட்ட மண்டப மிருக்கிறது. அதில் கோடை உத்ஸவத்தில் ரங்கநாதன் எழுந்தருளியிருக்கிறார். நாயக்கர் காலத்தில் மரியாதைக்காக அவரை துரை என்றே அழைத்ததினால் அவர் கட்டினமண்ட பம் துரை மண்டபமென்றும், அந்த மண்டபமிருக்கும் பிரதக்ஷணம் துரை பிரதக்ஷணம் என்றும் பெயர்பெற்றது.

## 74. பரமபத வாசல்

இது குலசேகரன் திருவீதியின் வடவண்டை வாசல். இந்த வாசலுக்குப் பக்கத்தில் வந்திருந்து பெருமாள் வேத விண்ணப்பங்களெல்லாம் கேட்ட பிறகு, மோக்ஷத்துக்குப் போகிறவர்கள் விரஜா நதியில் மூழ்கிப் பரமபதவாசலை அடை கிறார்கள் என்கிற பாவனையைக் காட்டுகிறபடியால் இந்த வாசல் பரமபத வாசலென்று சொல்லப்பட்டது. இதன் கீழ் புறமுள்ள கிணறும் விரஜாநதி என்று வழங்குகிறது.

## 75. மடப்பள்ளிகள்

இவைகள் குலசேகரன் திருவீதிக் கீழண்டையில் இருக்கின்றன. பணியாரம் பண்ணத் தனி மடப்பள்ளியும் பிரஸாதம் பண்ணத் தனி மடப்பள்ளியும் இருக்கின்றன. பிரஸாத மடப்பள்ளியிலுள்ள ஹோம குண்டத்தில் நித்தியப்படி இருவேளையிலும் நடக்கவேண்டிய ஹோமம் நடக்கிறது.

திருக்கார்த்திகை தினம் ஏற்ற வேண்டிய திருவிளக்குகள் இந்த ஹோமகுண்டத்திலிருந்து ஏற்றப்பட்டு, பிரதிஷ்டை செய்யப்பட்டு அதன் பின் ரங்கநாதன் ஸந்நிதியில் கொண்டு போய்ச் சமர்ப்பிக்கப்படுகின்றன.

## 76. நாழிகை கேட்டான் வாசல்

இது குலசேகரன் திருவீதியிலிருந்து ராஜ மஹேந்திரன் திருவீதியாகிய இரண்டாம் பிராகாரத்துக்குப் போகும் வாசல். இந்த வாசலுக்குப் பெருமாள் எழுந்தருளினவுடன் நாழிகை எவ்வளவாயிற்றென்று பெருமாளுக்கு ராஜோபசாரமாகச் சொல்வது ஆதிகாலத்து வழக்கம். அக்காரணத்தினால் இதற்கு மேலே கண்ட பெயர் உண்டாயிற்று.

இந்த வாசலின் முன்புறம் பத்ரன், சுபத்திரன் என்கிற தேவதைகளும், பின்புறம் சங்கநிதி, பதுமநிதி இருவர்களும் துவாரபாலகர்களா யிருக்கிறார்கள்.

## 77. ராஜ மஹேந்திரன் திருவீதி

இது ரங்கநாதனின் இரண்டாவது பிராகாரம். இது ராஜ மஹேந்திர சோழ ராஜனால் ஏற்படுத்தப்பட்ட படியால் அந்த ராஜாவின் பேரால் அழைக்கப்பட்டிருக்கிறது. இந்த வீதியில் பஞ்ச பருவ உத்ஸவங்கள் நடக்கின்றன. இராப்பத்து கோடை உத்ஸவங்களில் வீணை கச்சேரி பெருமாள் கேட்கிறார்.

## 78. கருகூலம்

இது மேற்சொன்ன வீதியின் தென்மேற்கு மூலேயி லிருக்கிறது. இதில் பெருமாளுடைய திருவாபரணங்கள், தங்கம் வெள்ளிகளாலாகிய பஞ்ச பாத்திரங்கள் குடம் வகையரா முதலிய விலேயுயர்ந்த சாமான்களெல்லாம் வைக்கப் பட்டிருக்கின்றன.

இதற்கு வடக்கில் பெருமாளுக்குச் சந்தனமரைக்க, திருமஞ்சனத்துக்கு வெந்நீர் போட்ட வேஷ்டிகள் உலர்த்தத் தனித்தனி அறைகளிருக்கின்றன.

## 79. சுக்கிரவார அறை

இது மேலே சொன்ன அறைகளின் வடக்கே இருக் கிறது. இந்த அறையில் பெருமாளுக்கு வெள்ளிக்கிழமை களில் சாத்தவேண்டிய புனுகெண்ணெய் தயாராயிருப்ப தோடு, கஸ்தூரி திருமண் காப்பு சேர்ப்பது, சந்தனங் களுக்கு வாசனைத் திரவியங்கள் சேர்ப்பது முதலியன நடை பெறுகின்றன. இந்த அறைக்குப் பக்கத்தில் விஜயரங்க சொக்க நாயக்கர், அவர் சம்சாரம் முதலியவர்களின் தந்தப் பிரதிமைகள் வைக்கப்பட்டிருக்கின்றன.

## 80. யாகசாலே

இது இந்தப் பிராகாரத்தின் வடமேற்கு மூலேயிலிருக் கிறது. ரங்கநாதன் பிரம்ம உத்சவங்களில் இவ்விடம் வந்து திருமஞ்சனம் பண்ணிக்கொண்டு பஞ்சகுண்ட ஹோமங் களேச் செய்துவிட்டுச் சந்நிதிக்குப் போய் விடுகிறார். யாகப் பேரர்என்கிற திருவரங்க மாளிகையார் இவ்விடம் வந்திருந்து மற்ற நாள்களில் நடக்கவேண்டிய யாகங்களே நடத்துகிறார்.

இதற்கு வெளியிலுள்ள மண்டபம் தொண்டைமான் ராஜாவால் கட்டப்பட்டபடியால் தோண்டைமான்மேடு என்று சொல்லப்படுகிறது.

## 81. சேனை முதலியார் சந்நதி

இந்தச் சந்நதி தொண்டைமான் மேட்டிற்குக் கிழக்கிலிருக்கிறது. இது ரங்கநாதனுடைய மந்திரியும் சேனைகளுக்கெல்லாம் அதிகாரியுமான சேனை முதலியார் சந்நதி. இவரை விஷ்வசேனர் என்றும் சொல்லுவார்கள். இவருடைய மூல பிம்பம் உட்கார்ந்தபடி யிருக்கிறது. உத்சவ பிம்பம் நின்று கொண்டு, ஆக்ஞை செய்வதுபோலிருக்கிறது. இவருக்கு ஒரு புறத்தில் ஹனுமாரும் மற்றொரு புறத்தில் விபீஷணரும் மந்திராலோசனை சபையாளராக நிற்கிறார்கள். ரங்கநாதனுடைய கட்டளைகள் இவர் மூலம் நடக்கவேண்டும். ரங்கராஜர் வெளியில் புறப்படும்போதெல்லாம் தம் ராஜாங்கப் பொருப்பை இவரிடம் ஒப்புவித்துவிட்டுத்தான் வெளியில் போவார். ரங்கநாதனுக்கு நிவேதனமாகும் சகல பிரசாதங்களும் இவருக்கும் நிவேதனம் செய்யப்படுகிறது. பெருமாளுக்கு[illegible]டக்கும் உத்சவங்களுக்குப் பாலிகை தெளிக்க மண்ணெடுக்க ஆதிபிரம்மோத்சவம் தவிர மற்ற உத்சவங்களில் ஹனுமாருடன் தாயார் சந்நதி சென்று மண்ணெடுத்து வருவார். ஆதிப்பிரம்மோத்சவத்துக்கு விபீஷணர்கூடச் செல்வார்.

## 82. அர்ச்சுன மண்டபம்

இது சேனை முதலியார் சந்நதிக்குக் கிழ்ப்புறமிருக்கிறது. அர்ச்சுனன் தீர்த்த யாத்திரை வந்தபோது அவனால் கட்டப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இதிலிருந்து மேற்கே பார்த்தால் ரங்கவிமானம் நன்றாய்த் தெரியும்.

இந்த மண்டபத்தில் பெருமாளுக்குப் பகல் பத்து, பத்து நாளும் உத்சவம் நடக்கிறது. ஆழ்வார் ஆசாரியர்களுடனிருந்து அரையரால் ஒப்புவிக்கப்படும் திருமொழி பிரபந்தத்தை ரங்கநாதன் கேட்டருளுகிறார். பத்தாம் நாள்

சாயங்திரம், மோகனுவதாரத்துடன் இந்த மண்டபத்தி லிருந்து புறப்பட்டுப் போகிறார்.

கௌசிக ஏகாதசி, ஸ்ரீராமநவமி தினங்களிலும் இந்த மண்டபத்துக்கு வருகிறார்.

## 83. குலசேகர நாச்சியார் என்னும் சேரகுல வல்லி சந்நதி

இது அர்ச்சுன மண்டபத்தின் வடமேற்கு மூலையிலிருக் கிறது. குலசேகராழ்வாருக்குப் பெண்ணாய்ப் பிறந்து ரங்க நாதனைத் தன் பக்தியால் அடைந்தபடியால் இந்த நாச்சியாருக் குச் சேரகுல வல்லி நாச்சியார் என்கிற பெயருண்டாயிற்று. இவர், ஸ்ரீராம நவமி யன்றையதினம் அர்ச்சுன மண்டபத்தில் ரங்கநாதனுடன் ஏகாசனத்திலிருந்து காட்சி கொடுக்கிறார்.

## 84. துருக்க நாச்சியார் அல்லது பீபீ நாச்சியார்

மகம்மதியருடைய முதல் படையெடுப்பில் ரங்கநாதனை டில்லிக்கு எடுத்துச் சென்றார்கள். ரங்கநாத பிம்பத்தை டில்லி பாக்ஷாவின் பெண் தன் விளையாட்டுக்காகக் கொடுக்கும் படி வாங்கித் தன்னுடைய அந்தப்புறத்தில் வைத்துக் கொண்டு ரங்கநாதனுடைய பக்தியைச் செலுத்த ஆரம்பித் தாள். அந்தப் பக்தி, ரங்கநாதனைவிட்டுப் பிரிந்து நிற்க முடி யாத ஒரு நிலையை உண்டாக்கிவிட்டது. ஒரு சமயம் அவர் அரண்மனையில் இல்லாத சமயம் பார்த்து, ரங்கநாதன் பரி ஜனங்கள் பாக்ஷாவைக்கண்டு தங்கள் பெருமாளைக் கொடுக்க வேண்டுமென்று கேட்டார்கள். பாக்ஷாவும் தன் புத்திரிக்குத் தெரியாமல் ரங்கநாதனைக் கொடுத்துவிட்டார். பாக்ஷாவின் புத்திரி அரண்மனைக்கு வந்து ரங்கநாதனைக் காணமல் ஸ்ரீரங்கம் வந்து ரங்கநாதன் திருவடிகளில் ஐக்கியமாய் விட்டார். அவரைச் சித்திர ரூபமாய் எழுந்தருளப் பண்ணி வைக்கப்பட்டிருக்கிறது. பீபீ நாச்சியார் தனக்குத் தினமும்

கொடுத்து வந்த ரொட்டி, வெண்ணெய், பால் முதலியவைகளை இன்றைக்கும் ரங்கநாதன் முதல் நிவேதனமாக அமுது செய்கிறார். இந்த நாச்சியாருக்குச் சேவை சாதிக்கவே, பகல் பத்து, பத்து நாளும் இந்த சந்நிமுன் ரங்கநாதனுக்குப் படியேத்தம் நடக்கிறது. மகம்மதியர் ஆசாரமான லுங்கி உடுத்துதல், முதலானவைகளை, இந்த நாச்சியாருக்காக ரங்கநாதன் அனுஷ்டிக்கிறார்.

## 85. ரேவதி மண்டபம்

இது அர்ச்சுன மண்டபத்திற்கு முன்னாக இருக்கிறது. இதில் ரங்கநாதன் தன்னுடைய நக்ஷத்திரமான ரேவதியன்று எழுந்தருளித் திருமஞ்சனம் முதலானவை கண்டருளுகிறார்.

## 86. கிளி மண்டபம்

இது ரேவதி மண்டபத்திற்குத் தெற்கிலும் அர்ச்சுன மண்டபத்திற்[illegible]கிழிலுமுள்ளது. இங்கே கிளிக்கூடுகள் கட்டப்பட்டிருப்பதால் கிளி மண்டபம் என்று சொல்லப்படுகிறது. பகல் பத்து உத்ஸவத்தில் அர்ச்சுன மண்டபத்துக்குப் பெருமாள் இதன் வழியாய் எழுந்தருளுகிறார். இதிலிருந்து பரவாசு தேவரைச் சேவிக்கவேணும்.

## 87. கிருஷ்ணன் கோயில்

இது கிளி மண்டபத்தின் தென்கிழக்கு மூலையிலுள்ளது. இதில் கிருஷ்ணன் அவருடைய பிதாவான வசுதேவர், அவருடைய பத்தினிகளாகிய தேவகி ரோகினி, முதலியவர்களிருக்கிறார்கள். வசுதேவர் கிருஷ்ணனுக்காக ஒரு கையில் பால் குடமும் மற்ற ஒரு கையில் பால் போட்டப் பாலாடையும் வைத்துக்கொண்டிருக்கிறார். ஸ்ரீஜெயந்தி உறியடி இந்த இரண்டு நாளும் இந்தக் கிருஷ்ணனுக்கு உத்ஸவம் நடக்கிறது.

## 88. ஸ்ரீனிவாச படம்

அஷ்டப் பிரபந்தம் பாடிய பிள்ளைப்பெருமாளையங்கார் ரங்கநாதனிடத்தில் அதிக பக்தியுள்ளவரா யிருந்துகொண்டு ஸ்ரீனிவாசனைப் பாடமாட்டே னென்று சொன்னபோது, தானே ஸ்ரீனிவாசனென்றும், ஸ்ரீனிவாசனே தானென்றும் காட்டிக்கொடுக்கும் பொருட்டு ரங்கநாதன் அந்த இடத்தில் ஸ்ரீனிவாசனாய் ஸேவை சாதித்தார். அதை ஞாபகப்படுத்த அந்த இடத்தில் ஸ்ரீனிவாச படம் வைக்கப்பட்டிருக்கிறது.

## 89. அழகிய மணவாளன் திருமண்டபம்

இது ரங்கநாதனின் சந்நதி வாசலிலுள்ள ஓர் உயர்ந்த மண்டபம். இதிலிருந்தே ஜனங்கள் ரங்கநாதனுக்கு விசுவரூபமாகும் காலத்தில் சேவிக்கவேண்டும். நிவேதனம் முதலானவைகள் நடந்து மங்கள ஹாரத்தி (தீபாராதனை) நடக்கும் போதும் ஜனங்கள் நின்று சேவிக்கவேண்[illegible] இந்த மண்டபத்தில் எகாதசி, அமாவாசை முதலான பஞ்ச பருவங்களில் ரங்கநாதன் எழுந்தருளித் திருமஞ்சனம் முதலானவை கண்டருளுகிறார்.

## 90. சந்நதி கருடன் கோவில்

ரங்கநாதனுடைய சந்நதிவாசலுக்கு எதிரில் தாம்பிரத்தில் ஒருகருடன் எழுந்தருளி யிருக்கிறார். அவர் பெரியவராயும் வயோதிகராயும் சேவை சாதிக்கிறார். துவஜாரோஹண காலங்களில் இவரிடமிருந்தே கருடன் துவஜப் படத்துக்கு ஆவாஹனம் செய்யப்படுகிறார். துவஜ அவரோஹணமானவுடன் துவஜத்திலுள்ள கருடனைக் கடத்தில் ஆவாஹனம் பண்ணிவந்து இவருக்கு அபிஷேகம் செய்யப்படுகிறது. ரங்கநாதன் சந்நதிக்கு எதிரிலிருப்பதால் சந்நதி கருடன் கோவிலென்றாயிற்று.

## 91. கண்ணாடி அறை

இது சந்நதி கருடன் கோவிலுக்கு மேற்கிலுள்ளது. பிரம்மோத்சவங்களில், பெருமாள், உத்சவம் முடியும் வரையில் கண்ணாடிகளால் அலங்கரிக்கப்பட்ட இந்த அறையில் இராத்திரி தங்குவார்.

## 92. மேல்படி - கீழ்ப்படி

இவைகள் அழகிய மணவாளன் திருமண்டபத்துக்குக் கீழ்ப்புறமும் மேல்புறமும் ஏறும் படிகள். இந்தப் படிகள் வழியாய்ப் பெருமாள் ஏறும்போது படியேத்தம் நடக்கும். சிவன் கோவில்களுக்குப் பஞ்சாக்ஷரப் படிபோல் இவைகள் ரங்கநாதனின் அஷ்டாக்ஷரப் படிகள்.

## 93. சந்நதி வாசல்

இது அழகிய மணவாளன் திருமண்டபத்திலிருந்து சந்நதிக்குள் நு[illegible]ம் வாசல். இந்த வாசலின் கதவு, மணிகளால் அலங்கரிக்கப்பட்டிருப்பதால் மணிக்கதவு என்று சொல்வது வழக்கம். இந்த வாசலுக்கு ஜயவிஜயாள் துவாரபாலகர்கள்.

## 94. காயத்ரி மண்டபம்

சந்நதி வாசல் நுழைந்து உள்ளே சென்றால், காயத்திரி மந்திரஸங்கையாக 24 தூண்கள் அமைக்கப்பட்ட காயத்திரி மண்டப மிருக்கிறது. இந்த மண்டபத்தின் மத்தியில் பெருமாளுக்குத் தளிகை சமர்ப்பிக்கும் அமுதுபாறையுள்ளது.

## 95. தர்மவர்மாவின் திருவீதி

இவ்வீதி, ஸ்ரீரங்க விமானத்தைச் சுற்றிலுமுள்ள முதல் பிராகாரம். இது தர்மவர்மாவான சோழராஜனால் உண்டாக்கப் பட்டதால் அவர் பெயரால் அழைக்கப்படுகிறது. இதன் முன்பாகத்தில் காயத்திரி மண்டபமிருக்கிறது. இந்தப்

பிராகாரத்தின் நான்கு மூலைகளிலும், நாராயணர், நாபிநளினர், நாகசயனர், நரஸிம்மர் என்பவர்களிருந்துகொண்டு ரங்கவிமானத்துக்குக் காவல்புரிகிறார்கள்.

இந்தப் பிராகாரத்தில் மேற்கு, வடக்கு, கிழக்கு பக்கங்களிலும் மண்டபமிருக்கிறது. கீழ்ப்பக்கத்திலுள்ள மண்டபத்தில் ஆனி மாதத்தில் நடக்கும் ஜேஷ்டாபிஷேகத்தன்று ரங்கநாதன் முதலானவர்கள் எழுந்தருளித் திருமஞ்சனம் நடக்கிறது.

இந்தப் பிராகார மதிலில் நூற்றெட்டுத் திருப்பதி பெருமாள்களும் சித்திரத்தில் எழுதப்பட்டிருக்கிறார்கள்.

## 96. ஸ்ரீரங்க தத்துவம்

ஸ்ரீரங்கநாதனுடைய சப்தகாராகாரங்கங்களைப் பலபடியாய்ப் பலர் பேசியிருந்தாலும், ரங்கநாதனின் அடியாரான திவ்ய கவி பிள்ளைப்பெருமாளய்யங்கார், திருவரங்கத்துமாலை 95-ம் பாட்டில் "அருமறை யோதிய வோமெ ழிடமூழுத்தும்... எங்கோன் விழிதுயில் கொண்டருளத் திருமதிலேழும் விமானமுமாகிச் சிறக்கின்றனவே" என்று பாடியுள்ளார். அதாவது அஷ்டாக்ஷரத்திலுள்ள பிரணவம் விமானமாகவும், நமோநாராயணாய என்கிற ஏழு எழுத்தும் ஏழு பிராகாரங்களாகவும் பிரகாசிக்கிறது என்கிறார்.

இவ்வளவு மகிமையோடிருப்பதால் தான் ரங்கநாதனுடைய கோவிலுக்குப் பெரிய கோவிலென்ற பெயருண்டாயிற்று. ராமனால் ஆராதிக்கப்பட்டபடியால் ரங்கநாதனையும் பெரிய பெருமாள் என்று சொல்லுகிறார்கள்.

திருமங்கையாழ்வார் தமது முதல் பதிகத்தில் நாராயணா என்னும் நாமம் "குலந்தரும் செல்வந்தந்திடும், அடியார் படுந்துயராயினவெல்லாம் நிலந்தரஞ் செய்யும் நீள் விசும்பருளும் அருளொடு பெருநிலமளிக்கும், வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்றதாயினுமாயின செய்யும்" என்கிறார்.

எட்டெழுத்தின் ஒரு பதத்திற்கே இவ்வளவு பலனைக் கொடுக்க சக்தியிருந்தால், பிரணவப் பொருளாகிய ரங்க நாதனையும் அஷ்டாக்ஷர ஸ்வரூபமான ஸ்ரீரங்கம் கோவிலையும் வணங்கி வழிபடுமவர்களுக்கு இகத்திலும் பரத்திலும், மனோரதித்து அடையக்கூடாத பலனுமுண்டோ? எல்லாமடையலாமென்பது நிச்சயம்.



இந்த க்ஷேத்திரத்தை யாவரும் வந்து அடிவணங்கி, ரங்கநாதனுடைய ஸ்ரீரங்க ஸ்ரீநித்யமாக விளங்கவேணுமென்று பிரார்த்திக்க வேண்டியது அவசியம்.

## 97. நிர்வாகம்

தற்காலம் இந்தத் தேவஸ்தானமானது சென்னை இந்து மத பரிபாலன போர்டார் அவர்களுடைய நேர்பார்வையிலிருந்து வருகிறது. இக்கோயிலுக்கு முக்கியமான வரும்படி உபயங்களிலும், நிலங்களிலும் தார்மிஷ்டர்கள் ஏற்படுத்திய எண்டோமெண்டிலிருந்து வரக்கூடியவையும், காணிக்கையாய் வரக்கூடிய கால்நடைகளிலும், உண்டிகையிலும், கவர்ன்மெண்டாரால் கொடுக்கப்படும் ரூ. 35,000 மோகினி துகையும் சேர்ந்து சுமார் ரூ. $1\frac{1}{2}$ லக்ஷம் வரும். ஷ வரும்படியானது ஆதிகாலத்தில் ஏற்படுத்திய திட்டப்படி செலவு செய்ய முன்காலத்துச் சாமான்கள் கிரயத்திற்கும் தற்காலத்துக் கிரயத்திற்கும் வித்தியாசம் அதிகம் இருப்பதால் வரவு போதாமலிருக்கிறது. அனேக கோபுரங்களும், மதில்களும் மண்டபங்களும் ஜீர்ணோத்தாரணம் செய்யத்தகுந்த பொருள் வருவாய் இல்லாதபடியால் பொது ஜனங்கள் உசிதம்போல் ஜீர்ணோத்தாரணம் செய்யும் கைங்கர்யத்தை ஏற்றுக்கொள்ள வேணுமாய்க் கோரப்படுகிறது.

சுபம்!

